# LIFE

OF

# The Rev. N. DEVASAHAYUM, B. A.

( 1851 to 1919 )



---

"வேதத்தை வாலிபர்களுக்குத் தித்திப்பு ஆக்கும் பொருட்டு நானே வேதத்தை மிகுந்த பிரியமாய் படித்தேன். ஆண்டவருடைய ஒத்தாசையால் அநேக விசை அதின் ஆழங்களுக்குள் இறங்கி ஏறினேன். நான் என் விருத்தாப்பியத்தில் வேதத்தை என் முக்கியமான பாட புஸ்தகமாகப் படித்தும் நான் இன்னும் முதல் பாடம் படிக்கும் சிறு குழந்தையைப் போல் இருக்கிறேன். தாவீது ராஜா, 'உம்முடைய வேதம் மகா விஸ்தாரம்' என்று சொன்னது அவ்வளவும் சத்தியம்."

(77-ம் பக்கம் பார்க்க.)

---

PRINTED AT
THE LAWLEY ELECTRIC PRINTING PRESS,
KARUNANITHI MEDICAL HALL,
TANJORE.

1935.

# LIFE

OF

# The Rev. N. DEVASAHAYUM, B. A.

( 1851 to 1919 )




EDITED
AND
PUBLISHED BY

Dr. D. W. DEVANESEN, M. A., D. I. C., Ph. D. (Lond.)
ASSISTANT BIOLOGIST,
Department of Fisheries,
CALICUT.



PRINTED AT
THE LAWLEY ELECTRIC PRINTING PRESS,
KARUNANITHI MEDICAL HALL,
TANJORE.

1935.

PRICE, As. 6.]




# முகவுரை.

உத்தரன் சபையைச் சேர்ந்த கனம் தேவசகாயம் ஐயரைக் குறித்து கேள்விப்படாத தமிழ்நாட்டு கிறிஸ்தவர்கள் அபூர்வம். அந்தச் சிறந்த மகாத்மாவின் ஜீவிய சரித்திரத்தை வாசிப்போருக்கு, அதிலே விளங்கும் தேவ பராமரிப்பும், லோக செல்வாக்கில் வெறுப்பும், பரிபூரண விசுவாசமும், தத்தம் ஜீவியத்திற்கு முன்மாதிரியாகவும் தூண்டுகோலாகவும் அமையுமென்ற முழு நம்பிக்கையே இதை அச்சுப் பதிக்க என்னை ஏவினது.

ஐயர் அவர்களின் விருத்தாந்தத்தை எழுத விரும்பி, நான் உத்தரவு கேட்டபொழுது "ஏன் ஒரு பாவியின் ஜீவியத்தை எழுதவேண்டும்" என்று சொல்லி மறுத்து விட்டார்கள். நாளடைவில் அவர்களுடன் பேசிப் பழகி கடைசியாக 23-ம் தேதி செப்டம்பர் ௴ 1913-ம் ௵ அவர்களின் அனுமதி பெற்று, தாங்களே சொல்லவும் நான் எழுதவும் ஆரம்பித்தேன். இந்தச் சுய சரித்திரம் தொடர்ந்து எழுத முடிந்ததில்லை. அவர்களுக்கும் எனக்கும் வாய்த்த சமயங்களில் எழுதப்பட்டதினால், 31 தேதி மே ௴ 1918-ம் ௵ தான் முடிவு பெற்றது. ஏப்ரல் ௴ 2-ம் தேதி 1919-ம் ௵ தேவசகாயம் ஐயர் 68-வது வயதில் தஞ்சாவூரில் மரித்தார்.

பல காரணங்களினாலும் இடையூறுகளினாலும் கைச்சுருளை இதுவரையில் அச்சுப் பதிக்க முயற்சியெடுக்க முடியாமற் போயிற்று. இந்தச் சுருக்கமான வரலாற்றில் அடங்கியிருக்கும் படிப்பினைகள் ஆத்ம ஈடேற்றத்திற்கு ஒத்தாசையாயிருக்கிறதென்று இதை வாசிக்கும் நண்பர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்கிற நிச்சயம் எனக்கு உண்டு.

*West Hill, Calicut,*
*19—2—1933.*

D. W. DEVANESEN.

# பொருள் அட்டவணை.

# அத்தியாயம் 1.



## பிறப்பும் பாலிய பருவமும்.

**த**ஞ்சாவூர் ஜில்லா நிரம்ப வளப்பமானதென பொதுவாக கருதப்பட்டாலும், அதன் தென்பாகம் வறண்டதும் பல னற்றதுமான பூமி; மழைதவிர நீர்ப் பாய்ச்சல் கிடையாது. அந்த ஜில்லாவின் வடபாகம் காவேரி நதியும் அதின் கிளைகளும் பாயப்பெற்று செழிப்பு நிறைந்தது. சூரிய வெப்பம் மூண்ட வறண்ட பாகத்தில்,* தஞ்சாவூருக்குத் தெற்கே 14 மைல் தூரத்தில் 'கன்னந்தங்குடி' யென்ற ஓர் கிராமம் இருக்கிறது. இங்கே கம்பு, கேள்வரகு, சோளம் முதலிய புன்செய் தானியங்கள் விளையும். காலாகாலங்களில் பெய்யும் மழையினால் நெல்லும் பயிராகின்றது. நாலா பக்கங்களிலும் இந்தக் கிராமத்தைச்சுற்றி அடர்ந்த காடாகையால், மாட்டுமெந்தைகளுக்கு வேண்டிய புல் நிறைந்த புறம்போக்குகள் இருக்கின்றன. அக்காலத்தில் இருந்த வீடுகள் அநேகமாக கூரைக்குச்சுகள் தான். கிழக்கு மேற்குமாக ஓடும் அந்த கிராமத்தின் மத்தியில் ஒரு பள்ளத்தாக்கு இருக்கிறதினால், அது இரண்டு பகுதியாய் பிரிக்கப்பட்டுள்ளது. கிராமத்தின் மேற்கு பாகம், ராமேஸ்வரத்திற்குப் போகும் பாதையில் கட்டப்பட்டுள்ள ராஜா சத்திரம் வரை நீண்டது. இந்தப் பாகத்தில்தான் சுவிசேஷ பிரபல்ய சங்கத்தாரால் ஏற்பட்ட மிசியோன் (S. P. G. Mission) சில கிறிஸ்தவ குடும்பங்களைச் சேர்த்து, அவர்களுக்குத் தகுந்த ஒரு ஆலயமும் கட்டி வைத்தார்கள். அந்த தேவாலயம்

---

* தற்காலத்தில் 'மேட்டூர்' அணை கட்டப்பட்டபின் காவேரி நதியின் ஜலம் தென்பாகத்திலும் பாய்வதினால், நன்செய் நிலங்கள் அங்கே உண்டாயிருக்கின்றன.

இன்னும் நிற்கிறது. கிராமத்தின் கிழக்கு பாகத்திலிருந்த கிறிஸ்தவர்கள் அதிக சொற்பம்.

இந்த கீழ் பாகத்தில் 1851-ம் வருஷம் ஆகஸ்டு-மீ 9-ம் தேதியில் பிறந்தேன். நவம்பர்-மீ 9-ம் தேதி ஞானஸ்நானம் கொடுத்தார்கள். இதையொட்டின ஒரு விசேஷமான சம்பவத்தைக் கூற விரும்புகிறேன். நவம்பர் துவக்கத்தில் பெரு மழை சொரிந்து, உக்கிரமான பிரசண்டமாருதம் எழும்பி ஒரு பகலும் இரவும் சேதமுண்டாக்கின. என்னுடைய பெற்றோர் வசித்த வீட்டின் கூரை காற்றடித்துக் கொண்டுபோய்விட்டது. அந்தப் பெரு மழையிலும், கார் இருளிலும், கோஷ்டமான புசலிலும், பெரிய ஆட்களே தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது அசாத்தியமான காரியம். அதில் மூன்றுமாத சிசுவை எப்படிக்கவனிப்பது? பொழுது விடிந்தபிறகு, குழந்தையின் உடம்பு மழையில் ஓயாமல் நனைந்ததினால் குளுமை அண்டி, விரைத்து, வெளிப் பார்வைக்கு உயிரற்றதாய்க் காணப்பட்டது. அநேக மாடுகளும் கோழிகளும் செத்துக்கிடக்கக் கண்டார்கள். இந்த சிசுவும் இறந்ததென எல்லோரும் எண்ணி, அக்காலத்து வழக்கப்பிரகாரம் பின் உள்ள கொல்லையில் புதைப்பதற்கு ஒரு சிறிய குழியை ஆயத்தம் செய்தார்கள். இந்த சமயத்தில், குழந்தையின் ஹிந்து பாட்டியார் காவேரியம்மாள் அவனை எடுத்து நல்ல நெருப்பு முன் கிடத்தி உடம்பைத் தேய்த்து உயிர் உண்டோ இல்லையோ என்பதை சோதித்தார்கள். ஒரு மணி நேரத்தில் நல்ல உயிர்க் குறிகளுண்டாகி சத்தத்துடன் அழ ஆரம்பித்தான். அவனை வெகு சந்தோஷத்துடன் பெற்றோரிடம் கொடுக்க, அவர்கள் அந்த கிராமத்து உபதேசியார் ஜேனக்கி தேவசகாயம்பிள்ளை (Jaenicke Devasahayam) யிடம் கொண்டுபோய் காண்பித்தார்கள். அவர் உடனே ஐரோப்பிய குருவாகிய Rev. John Hubbard ஐயரிடம் எல்லோரும் சென்று ஞான

ஸ்நானச் சடங்கை நிறைவேற்றும்படி செய்தார். உபதேசியார் ஞானத்தகப்பனுக நின்ருர்; அவர் விருப்பத்தின்படியே பெற்ருேர் இணங்கி 'தேவசகாயம்' என்ற பெயரையும் இட்டார்கள்.

நான் இந்த கிராமத்தில் ஒன்பது வயது வரையில் இருந்தேன். அவ்வளவு காலமும் கிறிஸ்துமார்க்க போதனை யொன்றும் எனக்கு கிடைத்ததில்லை. எங்கள் குடும்பத்தில் காலை ஜெபமும் மாலை ஜெபமும் நடைபெறவில்லை. சமுசாரிகளான என் பெற்ருேர் அதிகாலையில் எழுந்தும் அதி சீக்கிரம் தூங்கவும் போவார்கள்; குடும்ப ஜெபத்தைப்பற்றி நினைக்கிறதேயில்லை; ஆனல் குடும்பத்தில் யாராவது வியாதிப்பட்டால் அதிக ஊக்கமாக ஜெபம் செய்ததை நான் பார்த்திருக்கிறேன். "கர்த்தருடைய ஜெபம்" எனக்கு ஒருவரும் கற்பிக்கவில்லை; அப்படியே "பத்து கற்பனையும்" "விசுவாசப்பிரமாணமும்" எனக்கு தெரியாது. இவைகளை மூன்று வருஷங்களுக்கு பிற்பாடு தரங்கம்பாடியில் லுத்தரன் போர்டிங் பள்ளிக்கூடத்தில் முதல்முதல் கற்றேன். எங்கள் மாட்டு மந்தைகளை மேய்த்த கீழ்சாதி மனுஷருடன் கூடிப்போய் அவர்கள் பேசும் கெட்டவார்த்தைகளையெல்லாம் கற்றுக்கொண்டேன். என்னுடைய களியாட்டுகளெல்லாம் தாழ்ந்த சாதி ஹிந்து கிராம ஜனங்களின் விக்ரக ஆராதனையுடன் கலந்துகொண்டது. அவர்களுடன் விக்ரக அம்பலங்களுக்கு (shrines) சென்று, தொழுதுகொண்டேன். அவர்களுடைய தொழுவினையில் (worship) கோழி அறுப்பது, பேய் ஆட்டம் முதலிய சடங்குகள் உண்டு. இவைகள் சுற்றி அலையும் ஒரு சிறுவனுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தன. எல்லாவற்றைக்காட்டிலும் என் மனதுக்கு களிப்பையுண்டாக்கினது, மலையேறியம்மையின் உற்சவமே! அந்த அம்மையின் கோவில் கீழக்கன்னந்தங்குடிக்கும் மேலக்கன்னந்தங்குடிக்கும் நடுவில் இருந்தது. வருஷத்திற்கு ஒரு முறை அந்த தேவ

தையைக்கொண்டாடி ஒரு மாதம் உற்சவம் நடக்கும். அதன் முடிவில் "தாதர்கள்" என்று பேர்பெற்ற நாடகக் கூத்தர்கள் ஹிந்து காவியங்களிலும் புராணங்களிலுமிருந்து அநேக கதைகளை வேஷம் போட்டு காண்பிப்பார்கள். இந்தத் திருவிழா கொண்டாடுவதற்கு கிறிஸ்தவர்களிடமிருந்துகூட தலைவரி வாங்குவார்கள். கிறிஸ்தவர்கள் வரி கொடுக்காவிட்டால் அவர்களை சாதியை விட்டு விலக்கிவைப்பார்கள்.

மேலக்கன்னந்தங்குடியிலிருந்த தேவாலயம் கீழக்கன்னந்தங்குடிக்கு இரண்டு மைல் தூரம் ஆகையால், இங்கே வசித்த கிறிஸ்தவ குடும்பங்கள், அநேக ஆராதனைகளுக்கு வருஷத்தில் போகமுடியாமல் நேரிட்டது. இது காரணத்தால் அவர்களுடைய மார்க்கம் ஹிந்து உறவினரின் அஞ்ஞானத்துடன் ஒட்டியிருந்தது.

சுவிசேஷ பிரபல்லிய சங்கத்தாரால் மேலக்கன்னந்தங்குடியில் ஒரு கலாசாலையும் ஏற்படுத்தப்பட்டிருந்தது. தஞ்சாவூரில் St. Peter's College ஸ்தாபிக்கப்படும் வரையில் தென் இந்தியாவில் கன்னந்தங்குடி வித்யாசாலை ஒரு முக்கியமான கல்வி ஸ்தலமாயிருந்தது. ஆனாலோ கன்னந்தங்குடி கிராமவாசிகள் கல்வி பயிற்சியில் ஒருவிதமான மனப்பிரியமும் கொண்டதில்லை. வெவ்வேறு ஊர்களிலிருந்து வேளாள குலத்தைச்சேர்ந்த மாணாக்கர்களும் இதரசாதி மாணாக்கர்களும் அங்கே கொண்டுவரப்பட்டு கல்வி பயின்றார்கள். மாணாக்கர்களின் சௌகரியத்திற்காக ஒரு சாப்பாட்டு மனையும் (boarding school) திறந்திருந்தார்கள். அருகாமையிலிருந்த ராஜாசத்திரத்திலிருந்து தினசரி அரிசி காய் பதார்த்தங்கள் இந்த மனையில் வசிக்கும் மாணாக்கர்களின் உணவுக்காக உபகாரமாய் கொடுக்கப்பட்டது. அதற்கு 'உலுப்பை' என்று பெயர். ஆண்களுக்கு சமர்பித்த கல்விசாலையைப்போலவே,

ஒரு பெண் பாடசாலேயுமிருந்தது. கிராமத்தாரோ தங்கள் மக்களே போர்டிங் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி இதர சாதி மாணுக்கர்களுடன் போஜனம் செய்வது மகா கேவலம் என்று எண்ணங்கொண்டார்கள். தங்கள் பிள்ளேகளுக்கு விவசாயத் தொழிலானபடியால் வெளிமாணுக்கர்களாகவும் (day scholars) அவர்கள் கல்வி பயில முயற்சியெடுத்ததில்லே.

---

## அத்தியாயம் 2.

---

### குடும்ப வரலாறு.

என் தாயார் என் தகப்பனுருக்கு மூன்ருவது மனேவி. முதல் மனேவி இரண்டு ஆண் குழந்தைகளே விட்டு இறந்து போனுளாம். அவர் அநேக நாள் துக்கங்கொண்டாடி மறு விவாகம் வேண்டாம் என்று தீர்மானஞ்செய்தார். மூத்த மகன் நல்லதம்பி கன்னந்தங்குடி கலாசாலேயில் வாசிக்கும் பொழுது அவனுடைய ஞானத்தையும் பக்தியையும் கண்ட ஐரோப்பிய மிஷனரி Rev. Charles Hubbard அவனேக் கல்கத்தாவுக்கு அனுப்பி Bishop's college-இல் பாதிரியார் பட்டத்திற்கு படிக்க வைக்க விரும்பி என் தகப்பனுரிடம் உத்தரவு கேட்டாராம். அவர் தன் சொந்த உயிரைப்போல் தன் மகனே நேசித்ததினுல், அவ்வளவுதூரம் அனுப்ப முடியாதென மறுத்து விட்டாராம்.

இது நிற்க: சென்னே பட்டாளத்தில் ஹவில்தாராயிருந்த ஒரு சிப்பாயினுடைய சகோதரியின் வலேயில் அகப்பட்டு என் தகப்பனுர் அவளுடன் சென்னேக்கு சென்ருராம். அங்கேயிருந்தபொழுது நல்லதம்பிக்கு வைசூரி வார்த்திருக்கிற

தென்று செய்தி எட்டினது. உடனே துன்மார்க்க ஜீவியத்தை உதறிவிட்டு, கால்நடையாய் கன்னந்தங்குடிக்குப் புறப்பட்டார். அக்காலத்தில் இருப்புப் பாதை வரவில்லை. 15 நாள் பிரயாணத்தை 9 நாளில் முடித்து, கிராமத்திற்கு வந்து முந்தின நாள் தன்மகன் கல்லறையில் அடக்கம்பண்ண பட்டானென்ற செய்திகேட்டு அங்கலாய்த்தார். உடனே சமாதிக்குப்போய் பிரேதத்தை தோண்டியெடுத்து ஒருநாள் முழுவதும் வைத்துப் பார்த்தார். மேஸ்திரட்டு கேள்விப்பட்டு ஆட்களையனுப்பி கட்டாயப்படுத்தி மறுபடி சடலம் அடக்கமானது. என் தகப்பனுக்கு இந்த துக்கம், தான் 1870-ம் ௵ மறுமையில் சேருமளவும், மாருமல் தன் மனதை எடுபடாமல் இருந்து கொண்டிருந்தது. இந்த சம்பவத்திற்குப் பிற்பாடு அவர் ஒரு புது மனுஷனுனர்; இது முதல் முற்றும் மனந்திரும்பி, தேவ பயம் உண்டாகி, நல்ல மரணம் கிடைக்கப் பெற்ருர். தானே மகா துயரத்துடன் இந்த வரலாற்றை யெனக்கு கூறியுள்ளார்.

என் தகப்பனரின் இரண்டாவது மனைவி ஒரு ஹிந்து பெண். தன்னை விவாகம் செய்த பிறகு கிறிஸ்து மார்க்கத்தை அவள் தழுவிக் கொள்வாள் என்ற நம்பிக்கையுடன் என் தகப்பனர் துணிந்தார்களாம். ஆனல் அந்த அம்மாள் தன் மதத்தை விடுவதில்லை யென்று சாதித்தாளாம். தான் குடும்ப ஜெபம் வைத்தால், அவள் ஒரு பக்கத்தில் விக்ரகங்களுக்கு ஆராதனை நடத்துவாள். நெற்றியில் விபூதி. பொதுவாக அக்காலத்தில், ஒரு பெண் விவாகம் செய்த புருஷனுடைய மதத்தை தழுவி ஜீவிப்பது வழக்கமாகவிருந்தது. ஒரு கிறிஸ்தவ ஸ்திரீ ஹிந்து மனிதனைக் கலியாணஞ் செய்தால், ஹிந்துவாக மாறுவதும், ஒரு ஹிந்து பெண், கிறிஸ்தவ மாப்பிள்ளைக்கு வாழ்க்கைப்பட்டால், அவள் கிறிஸ்து மார்க்கத்தை தழுவுவதும் சகஜமாகவிருந்தது. இந்தத் திருஷ்டாந்தத்தில் ஹிந்து மனைவி கிறிஸ்தவனை மணம் புரிந்தும் ஹிந்து வாகவே

யிருந்தாள். ஆதலால் என் தகப்பனருக்கு ஒரு நாள் கடுங்கோப முண்டாக, பஞ்சாயத்தாரை வரவழைத்து, அவளுக்கு ஒரு தள்ளுதல் சீட்டையும் அத்துடன் சேரவேண்டிய காசையும் கொடுத்து, தன்னை நீக்கிக் கொண்டார்களாம்.

என் தாயாருக்கு பிறந்தது ஏழு மக்கள். ஆனல் எனக்கு அறிவு வந்த பிற்பாடு, ஒரு மூத்த சகோதரியும் இரண்டு சகோதரரும் தான் அறிவேன். என் தாயார் தன்னுடைய மாற்று குமாரனை பிரியத்துடன் நடத்தாததினல் அவருக்கு வீட்டிலிருப்பது வெறுப்பாயிருந்தது. நல்லதம்பி இறந்தது முதல் இவரைப் படிக்க வைக்க தகப்பனருக்கு மனமில்லை. 25 வயது வாலிபனனர். தகப்பனர் ஏதோ அலுவலாக சிலநாள் கிராமத்தை விட்டு வெளியே போயிருந்த பொழுது, என் தாயார் இவரைப் பார்த்து, என்னுடைய சேஷ்டையை கண்டித்து நிறுத்தும்படி சொல்லிவிட்டுப் போக, இவர் தன் மாற்றுந்தாயின் மேலுள்ள கோபத்தை ஆற்றுவதற்கு இதுதான் சமய மென்று கருதி ஒரு அரிவாளை நெருப்பில் காச்சி, என் முதுகில் ஒரு சூடு போட்டார். நான் மரணத் தறுவாயி லிருந்தேன். தகப்பனர் திரும்பி வந்து நேர்ந்ததை கண்ட பொழுது அண்ணன்மேல் அதிக கோபங் கொண்டு பேசினர். இதைப் பொறுக்கமாட்டாமல் அண்ணன் மோரீஸ் (Mauritius) தீவுக்கு ஒருவருக்குஞ் சொல்லாமல் ஓடிப்போனர்.

---

## அத்தியாயம் 3.

### கன்னந்தங்குடியை விட்டு நீங்குதல்.

இரண்டு முக்கியமான காரணங்களால் நாங்கள் சொந்த பூர்விக கிராமத்தைவிட்டு வெளியேறினோம். Rev. Richard Pope என்ற ஒரு ஐரோப்பிய குரு செலுத்தின "ஜாதிக் கொடுமை" ஜாதிக் கிறிஸ்தவர்களுக்கு மிகுந்த வருத்தத்தையும் சமாதானக் குறைவையும் விளைவித்தது. சபையாரெல்லோரும் ஆராதனையில் கலந்து ஜாதி வேற்றுமையில்லாமல் உட்காரவும், கர்த்தருடைய ராப்போஜனத்தை கலந்து வந்து ஏற்றுக்கொள்ளவும் கட்டாயப்படுத்தினர். கிராம வாசிகளுக்கு இது ஒரு பெரிய கொடுமையும் தோஷமுமாகத் தோன்றினது. ஏனென்றால் அந்தக் கிராமத்தில் ஜாதிக் கிறிஸ்தவர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் பொதுவான பந்தியும் சம்பந்தங்களும் நடந்தேறி வந்தன. தங்கள் வயல்களில் வேலை செய்து பிழைக்கும் ஆதி திராவிடர்களை நிரம்ப கேவலமான ஜாதியார் என்று அவமதித்து அவர்களுடன் உட்காருவதாவது, சாப்பிடுவதாவது, மகா தோஷமும் தீட்டும் என வெறுத்தார்கள். Pope ஐயர் ஜாதி வேற்றுமையை நீக்கும் பொருட்டு, தன்னுடைய சட்டங்களை உறுதியாய் அனுசரிக்க வேண்டுமென பிடிவாதமாய் நின்றதினால், அநேக கிறிஸ்தவர்கள் ஹிந்து மார்க்கத்தை தழுவினார்கள். ஆனால் கீழக்கன்னந்தங்குடியில் வசித்த சில குடும்பங்கள் கிறிஸ்து மார்க்கத்தை கைவிட அஞ்சின. அதற்கு முகாந்தரம் கிறிஸ்து மதம் கிராமத்திலே ஆதியில் ஏற்றுக் கொள்ளப்பட்ட வரலாற்றோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. முதல் முதல் கிறிஸ்து சமயத்தை தழுவினவர் என் தகப்பனரின் பாட்டனர். இவருடைய வம்சத்தில் தலைமுறை தலைமுறையாக ஒரே ஆண் தக்கி பிழைக்க, அவர் ஓர் கொடிய வயிற்று வலியால் பீடிக்கப்பட்டு அவஸ்தைப் படுவாராம்.

குன்மநோய் கொண்ட வம்சம் அடியோடே சந்தான மில்லாமல் அழிந்து போனால் நல்லதென அப்போது விவாகம் செய்யாமல் வாலிபனாயிருந்த என் பூட்டனார் தீர்மானித்து, தான் வழிபடும் சொந்த "பட்டவன்" கோவிலுக்குச் சென்று, குளத்தில் ஸ்நானம் செய்து அந்த விக்ரகத்தின் முன்னிலையில் தற்கொலை புரிய ஈட்டியை உருவினார். உடனே, "உனக்கு கெடுதி செய்து கொள்ளாதே! தஞ்சாவூருக்குப் போ!" என்று ஒரு அசரீரி வாக்கு (ஆகாசவாணி) பிறந்ததை கேட்டு, பிரமித்து, அந்த சப்தத்திற்கு கீழ்ப்படிந்து, அந்த நிமிஷமே ஒரு காளையின்மேல் சேணத்தை விரித்து ஏறி தஞ்சாவூர் நோக்கி சென்றார். அங்கே Rev. C. F. Schwartz ஐயரின் உபதேசியார் ஒருவரைச் சந்திக்க, அவர் என் பூட்டனாரை அந்த பரிசுத்தவானிடம் கொண்டுபோய் நேரில் விட்டார். அவரால் போதிக்கப்பட்டு, ஞானஸ்நானம் பெற்று, கன்னஙதங்குடியில் கிறிஸ்து மார்க்கத்தின் முதல் பலனானார். C. F. Schwartz மகாத்மாவினுடைய ஜெபத்தினாலும், ஆசீர்வாதத்தினாலும், வம்ச வம்சமாக வாதித்த இரைப்பையின் குத்துவலியும் நீங்கி, நல்ல சுகதேகியாய் என் பூட்டனார் கிராமத்திற்குத் திரும்பினார். அவரும் அவரின் பின்னடியாரும் அந்தப் பிணியினால் அவஸ்தைப்படவில்லை. இதனால் கிறிஸ்து மார்க்கத்தில் பலத்த விசுவாசம் உண்டாயிருந்தது. இப்போது ஹிந்து மார்க்கத்திற்கு திரும்பினால், அந்தக் கொடிய நோய் மறுபடியும் வரும் எனக் கலங்கிப் பயந்தார்கள். ஆகையால், "கிறிஸ்தவர்களாகவே நிலைத்திருக்க வேண்டும், Pope ஐயருடைய துன்பத்திற்கு தப்பும்படி கிராமத்தை விட்டு வெளியேற வேண்டும்" என்று கீழக் கன்னஙதங்குடியிலுள்ள சில குடும்பங்கள் தீர்மானம் செய்து கொண்டார்கள்.

என் தகப்பனார் குடும்பத்துடன் கிராமத்தை விடுவதற்கு இரண்டாவது காரணம் என்னவென்றால், மோரீசுக்கு ஓடிப்

போன மகன், தன்னிடம் வரும்படியும், அப்படி வந்தால் அவர்களையும் குடும்பத்தையும் நல்ல செல்வாக்கில் வைத்து பராமரிப்பதாகவும் ஓயாமல் எழுதிக்கொண்டிருந்தார். அவரைக்கண்ணால் பார்த்து களிக்கவேண்டும் என்கிற அபேக்ஷை தகப்பனாருக்கு மேலிட்டு மோரீசுக்குப் போகவேண்டுமென்று ஆவல் கொண்டார்கள்.

1859-ம் வருஷம் கடைசியில் எங்கள் கிராமத்தைவிட்டு நீங்கினோம். எங்கள் முன்னோர் பிதுராஜிய சொத்தில் சிலவற்றை விற்றும் சிலதை அடமானம் ஒத்தி வைத்தும் கிடைத்த பணத்தைச் செலவுக்கு எடுத்துக்கொண்டு மோரீசுக்கு போகும் கப்பலில் யாத்திரை செய்யும்படி தரங்கம்பாடிக்கு சென்றோம். ஆளொன்றுக்கு கப்பல் சார்சு ரூ. 120. அந்த காலத்தில் சொத்து நயமாயிருந்தது. ஆனாலோ பணம் சொற்பம். மிஞ்சினால் என் தகப்பனாரிடம் ரூ. 300-க்குமேல் கைவசமிருந்திருக்காது. தரங்கம்பாடி சேருமுன் கொஞ்சத்தொகை செலவானது. இருந்த மிச்சம் குடும்பம் முழுவதும் மோரீசுக்குப் போக போதவில்லை. இப்போது இரண்டு வழி எங்களுக்குமுன் தோன்றினது. ஒன்று, எங்கள் வசமிருந்த மீதி ரூபாய்களை எடுத்துக்கொண்டு கிராமத்திற்குத் திரும்பி, ஒத்தி வைத்த சொத்துக்களை மீட்டு, ஹிந்துக்களாகி ஜீவனம் செய்வது; அல்லது ஆபிரகாமைப்போல் முன்னேறிச்சென்று அந்நிய தேசங்களுக்குப்போய் கிறிஸ்து மார்க்கத்தில் நிலைத்திருப்பது. ஒரு வாரமாய் என்ன செய்கிறதென்று திகைத்து என் தகப்பனார் ஜெபத்தில் தரித்திருந்தார். பிற்பாடு 'திரினிதாது' (Trinidad) சர்க்கார் அனுப்பிய ஓர் விளம்பர பிரதி என் தகப்பனார் கையில் கிடைத்தது. அதில் இந்தியாவிலிருந்து வரும் ஜனங்களுக்கு வேலையும் நல்ல சம்பளமும் கொடுப்பதாகவும், யாத்திரையும் செலவில்லாமல் சகாயமாயிருப்பதாகவும் கூறியிருந்தது. இதை யென் தகப்பனார்

ஆண்டவர் காட்டிய வழியென ஒப்புக்கொண்டார். எங்க ளெல்லோருடைய பெயர்களையும் 'திரினிதாதுக்கு' வேலை யாட்களைச் சேர்க்கும் கண்காணி (Agent) பதிந்துகொண்டு சென்னைப்பட்டணத்திற்கு கால்நடையாய் நடத்தினான். அது ஒரு ஒழியாத பிரயாணமென்பது எனக்கு ஞாபகமிருக் கிறது. ஏறக்குறைய 20 நாள் பிரயாணம். சென்னைப்பட்ட ணத்தில் 'திரினிதாது' கப்பலுக்காக ஒரு மாதம் காத்துக் கிடந்தோம். புறப்படுவதற்கு ஒருவாரத்திற்குமுன் பிரயாணி களை ஒரு வைத்தியர் சோதனை செய்தார். இளைப்பு வியாதி யினால் வருந்துவதால் என் தகப்பனார் வேலைக்கு தகுதியுள்ளவ ரல்லவென்று வைத்தியர் சொல்லிவிட்டார். அவரையன்னி யில் குடும்பம் போகமுடியாதாகையால், எங்களை ீக்கி இஷ்டப்பிரகாரம் எங்கே போகவேண்டுமோ போகலாமென உத்தரவு அளித்தார்கள். மறுபடியும் இந்த விஸ்தாரமான லோகத்தில் ஒதுங்க இடமில்லாமல் நின்று திகைத்தோம்! தகப்பனார் கொஞ்சங்கூட விருப்பமில்லாமல் தன்னுடைய சொந்த கிராமத்தை நோக்கினார். அங்கேயிருக்கும் எங்கள் ஏராளமான சுதந்தரத்தில் ஒரு பாகத்தையாவது மீட்டு, கிளை யாரின் நடுவில் காலந்தள்ளலாமென்று எண்ணினார்கள். நாங்கள் பைய ஊர்ஊராக பிரயாணம் செய்து 'மாயவரம்' வந்து சேர்ந்தோம். இங்கே ஒரு வாரம் தங்கினோம். ஓர் கிறிஸ்தவர்களின் தேவாலயமும் குருவுமிருப்பதாகக் கேள்வி யுற்று, நாங்களெல்லோரும் ஞாயிற்றுக்கிழமை ஆராதனைக் குப் போனோம். Rev. J. M. N. Schwartz ஐயர் ஆரா தனையை நடத்தினார். அது Leipzig Lutheran Mission கோவில். என் பெற்றோர் அநேக நாட்களுக்குப்பின் ஒரு கிறிஸ்தவ சபையில் சேர்ந்து தேவனைநோக்கி ஜெபிக்க சிலாக்கியம் கிடைத்ததே என்ற உணர்ச்சியினால் கண்ணீர் சொரிந்ததை ஐயர் பார்த்திருக்கவேண்டும். ஏனென்றால் ஆராதனை முடிந்ததும், அவர்களிருவரையும் தன்னிடம்

வரும்படி யழைத்து, அவர்களுடைய வரலாறு முழுவதை யும் விவரமாய்க் கேட்டு அறிந்துகொண்டு, அவர்கள் குடும்பத் துடன் லுத்தரன் சபையைச் சேர்ந்துகொண்டால் தகப்பனு ருக்கு வேலை கொடுப்பதாகவும், என் மூத்த சகோதரன் யாக் கோபுக்கு தரங்கம்பாடி பள்ளிக்கூடத்தில் சம்பளமில்லாமல் படிப்புக்கு வேண்டிய ஒழுங்கும் செய்வதாகவும் வாக்குகொடுத் தார். என் பெற்றோர் சம்மதித்து, இதுவும் ஆண்டவர் காட்டிய வழியென்று லுத்தரன் சபையை குடும்பத்துடன் சேர்ந்தார்கள். தகப்பனார் படிப்பில்லாதவரானபடியினால், கோவில்குட்டியின் வேலை கொடுக்கப்பட்டது. ஏழு ரூபாய் சம்பளம். எனக்கு பிராயம் பத்தானாலும் தமிழ் அரிச்சுவடி கூட கற்காததினால், தன்னுடைய பசுமாடுகளை மேய்ப்பதற்கு என்னை அமர்த்திக்கொண்டார். வெகு சந்தோஷத்துடன் வேலையை ஒப்புக்கொண்டேன். ஏனென்றால் அது எனது கரடுமுரடான சுபாவத்திற்கு மிகவும் ஏற்றதும் விருப்பமு மானதாயிருந்தது. இந்த வேலையை ஒரு வருஷத்திற்கு மேல் செய்து பூமாதின் (Nature) புத்திரன் ஆனேன்.

ஒரு தினத்தில் சங். Schwartz ஐயர் என்னைக் கூப் பிட்டு மிகுந்த பக்ஷத்துடன் வினவி, தன்னை அப்பா (Papa) வென்று அழைக்கலாமென அனுமதி கொடுத்தார். தனக்கு சந்தான மில்லாததினால், அநேக சுதேச பிள்ளைகளை (பஞ்ச மரும் சூத்திரரும்) எடுத்து வளர்த்தார். எனக்கும் ஒரு தகப்பனைப்போல நடப்பதாக வாக்குக் கொடுத்தார். ஆனால் இந்த சம்பாஷணை என்னுடைய அஞ்ஞான இருள் நிறைந்த இருதயத்திற்கு உயிரற்றதாகவிருந்தது. அந்த நற்குணமும் சங்கையும் நிறைந்த ஆளிடமிருந்து (person) என் மன தோடு ஒட்ட நேரில் வந்த வலிய பக்ஷத்தை நான் உணர வேயில்லை. தமிழும் ஆங்கிலேயமும் கற்கும்படி ஒரு வருஷத் திற்கு முன்பாக தரங்கம்பாடி கலாசாலைக்கு அனுப்பப்பட்ட

என் மூத்த சகோதரன் யாக்கோபை பார்க்க என்னை தரங்கம் பாடிக்கு கூட்டிக் கொண்டு போவதாக ஆலோசித்தார்.

ஜெர்மன் லூத்தரன் மிஷன் அக்காலத்தில் தென் இந்தியாவில் நடத்தின கலாசாலை இது ஒன்றே. அந்த மிசியோன் சுவிசேஷ பிரபல்ய வேலை செய்த ஸ்தலங்களின் விஸ்தீரணம் கூட மிகவும் சிறியது. தரங்கம்பாடி, தஞ்சாவூர், மாயவரம், திருச்சினுப்பள்ளி, புதுக்கோட்டை, கோயம்புத்தூர் முதலிய நகரங்களில் மாத்திரம் வேலை நடத்தினுர்கள். சென்னபட்டணத்தில் அப்பொழுதுதான் ஒரு மிசியோன் ஸ்தலத்தை ஏற்படுத்தி வேலையை ஆரம்பித்திருந்தார்கள். தரங்கம்பாடி ஆங்கிலேய பாடசாலையில் தற்காலத்து 7-வது வகுப்பு வரையில் கற்றுக் கொடுத்தார்கள். சென்னையில் சர்வகலாசாலை (University) ஸ்தாபித்து ஐந்து வருஷங்களாயின (1857). உபாத்தியாயர் உத்தியோகத்திற்கு உயர்ந்த கல்வியில் தேர்ந்தவர்கள் (Bachelors of Arts) கிடைப்பது கூடாத காரியம். தாழ்ந்த படிப்புள்ளவர்கள்தான் அந்த ஊழியத்தை தெரிந்து கொண்டார்கள். உபாத்தியாயர் போதனுமுறை பரீட்சை (Training) கொடுக்காத வர்களாதலால், கல்வியை புகட்டுவதற்கு வேண்டிய திறமையுள்ள வர்களல்ல. புஸ்தகங்களின் விலை அரிதாயிருந்தது. தற்காலத்தில் அரையணு விற்கு வாங்கக் கூடிய பாலர் புஸ்தகம் மூன்றணுவுக்கு குறையாமல் விற்றது. கையால் திருத்தமாய் எழுதப்பட்ட தமிழ் அரிச்சுவடியின் விலை அரையணு. என் கையில் முதல் முதல் கிடைத்த புஸ்தகம் 'தமிழ் ஆதிமூல புஸ்தகம்.' இதன் பெயர் கூட தற்காலத்தில் யாருக்கும் தெரியாது.

---

# அத்தியாயம் 4.

## தரங்கம்பாடி கலாசாலையில் கல்வி பயிலுதல்.

தரங்கைக்கு சங். Schwartz ஐயர் என்னை கூட்டிக் கொண்டு போனபொழுது எனக்கு வயது பதினொன்று. கரடு முரடான நாட்டுப்புறத்தின் சுபாவம் எனக்குள் இன்னும் பலமாகவிருந்தது. சுயாதீனமான முரட்டு ஜீவியத்தில் பழகியிருந்த எனக்கு சுவர்களால் சூழப்பட்ட போர்டிங் பள்ளிக்கூடத்தில் அடைபட்டிருப்பது வெறுப்பாயிருந்தது. நான் அங்கே தங்கவேண்டுமென்று என் தகப்பனுர் Schwartz எனக்கு சொல்லவில்லை. "உன் அண்ணனைப் பார்க்க வா" என்று மாத்திரம் சொல்லி கூட்டி வந்தார். நானும் ஒன்றும் சமுசயிக்காமல் பின் தொடர்ந்தேன். என்னை சங். Stehlin ஐயரிடம் கொண்டுபோய் சிலவார்த்தைகளை ஜெர்மன் பாஷையில் பேசினுர். அதில் எனக்குத் தெரிந்த பதங்கள் என் அண்ணனின் பெயர்தான். உடனே அவர் மணியை அடிக்க, அந்த நாள் சட்டாம்பிள்ளை வந்தான். அவனிடம் என் கையை பிடித்துக் கொடுத்து, சாதாரண தமிழ் பாஷையில் என்னுடைய அண்ணனிடம் கொண்டுபோய்விட வேண்டுமெனக் கற்பித்தார். நான் கூடப்போனேன். அந்தவேளையில், தகப்பனுர் Schwartz தரங்கையைவிட்டு நீங்கி மாயவரம் திரும்பிச் சென்றுர். சிலமணிநேரங்களுக்கு பின், சங். Stehlin ஐயரிடம் போய் தகப்பனுர் Schwartz எங்கே யென்று கேட்டேன். அதற்கு, நான் அவரிடம் போவதைப்பற்றி இன்னும் ஆறுமாதத்திற்கு நினைக்கக் கூடாதென்றும், அத்தனை மாதங்களும் படிப்பில் நிலைத்திருக்கவேண்டும் என்றும் கட்டளையிட்டார். புஸ்தகங்களைக்கொண்டு படிக்கவேண்டுமென்கிற எண்ணங்கூட எனக்கு உமட்டலாயிருந்தது. ஏனென்றுல், நான் படிக்கப்பார்த்த மாணுக்கர்களெல்லாரும் ஓடி ஆடித்திரிய முடியாமல் அடைபட்டிருந்தார்கள். அதாவது, தங்கள் வகுப்பு

களிலும், படிக்கும் அறைகளிலும் வீற்றிருந்தார்கள். என்ஞல் அம்மாதிரியிருந்துகொள்ளமுடியவே முடியாதென நிர்ணயித்தேன். நான் மூர்க்கமாய் சங். Stehlin ஐயரிடம் சொன்னதாவது "நான் இங்கே இருக்கமாட்டேன்; எனக்கு படிக்க பிரியமில்லே; நான் போய் ஏதாவது ஒரு வேலே செய்து சுயாதீனமாயிருப்பேன்". இப்படி சொல்லிவிட்டு தோட்டத்தின் பெரிய வாசலுக்கு ஓட்டமாய் ஓடினேன். அங்கே பள்ளிக்கூடத்து வேலேயாள் (School Porter) ஒருவனே காவல் வைத்து நான் வெளியே தப்பிப்போக எத்தனித்தால் நிறுத்தி பிடிப்பதற்கு கட்டளே கொடுத்திருந்தார்கள். எனக்கும் அவனுக்கும் கைச்சண்டையுண்டானது. அவன் ஒரு ராக்ஷதன் ஆனதால் என்னே லேசாக வென்று Stehlin ஐயரிடம் இழுத்துக்கொண்டுபோஞன். அந்த பக்ஷம் நிறைந்த இருதயமுடைய குரு என்னேநோக்கி, "நீ எதிர்த்தால் உன்னே சிட்சிப்போம்; அதுதான் இந்தக் கலாசாலேயின் சட்டம். ஆஞல் உன்னுடைய சகோதரனேப்போல் நீ பொறுமையாய் கீழ்ப்படிந்தால் உன்னே என் மகனேப்போல் கவனிப்பேன்" என்று சொன்ஞர். யோசேப்பு என்ற ஒரு பெலசாலியான நற்குணமுள்ள வாலிபனுடைய பொறுப்பில் ஒப்புக்கொடுத்தார். ஆறுமாதத்திற்குள் அடங்கி சட்டத்திற்கு கீழ்ப்படிந்து நடக்கலானேன். ஆஞல் அவ்வளவுகாலமும் அரிச்சுவடிகூட கற்கக்கூடாதென்று பிடிவாதமாயிருந்தேன். காளேமாட்டுக்கு சிவப்புகந்தைத்துணி எப்படி மூர்க்கத்தை உண்டுபண்ணுமோ அதேமாதிரி எனக்குப் புஸ்தகங்கள் செய்தன. ஆரு மாதங்கள் முடிந்தபிறகு கிறிஸ்மஸ் பண்டிகை வந்தபடியால், நானும் என் அண்ணனும் மாயவரத்திற்கு போனோம்.

வீட்டிற்கு வந்ததும், காட்டு சுபாவத்துடன் சோம்பேறியாய் ஓயாமல் சுற்றி அலேந்தேன். சுயாதீனம் எனக்கு மிகவும் அருமையாயிருந்தது. அதை இழந்துபோக பிரியமில்லே.

மாயவரத்தின் ஓர் பாகமாகிய கூறைநாட்டில், பட்டுத்துணி நெய்து, ஒரு நாளைக்கு 12 அணுவுக்கு குறையாமல் சம்பாதித்து குடும்பத்திற்கு உதவி செய்வதாக என் தாயாருக்கு வாக்குக் கொடுத்து, என்னை மறுபடியும் போர்டிங் பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப வேண்டாம் என்று மன்றாடி கேட்டுக் கொண்டேன். என் தாயார் சம்மதித்தார்கள். ஆனால் Schwartz ஐயர் நான் கல்வி பயிலுவதில் எப்படியோ விருப்பங் கொண்டு, என் தகப்பனாரிடம் "உன் மகனை போர்டிங் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பாவிட்டால், உன் வேலையை இழந்து போவாய்." என்று வெருட்டினார். விடுமுறை நாட்கள் முடிந்த பிற்பாடு, என் தகப்பனார் கையில் ஒரு கம்பை எடுத்துக் கொண்டு, என்னை தரங்கம்பாடி பாதையில் முன்னே போகச் சொல்லி, தான் பின்னால் நடந்து வந்தார்கள். நான் வீட்டிற்கு திரும்ப விடாமல் அடித்து தரங்கை கலாசாலையில் சேர்த்து, "இனி மேல் வீட்டிற்கு வராதே; வந்தால், என்னுடைய மற்ற மக்களுடைய உணவுக்கு இடைஞ்சல் செய்வாய்." என்று கண்டித்து உணர்த்தினார். பட்ட அடியினால் பத்து நாள் ஜுரம் வந்து வருந்தினேன். பெற்றோர் அகத்தின் அபேக்ஷை அது முதல் என்னை விட்டு நீங்கினது. போர்டிங் பள்ளிக் கூடத்தையே என் வீடாக ஏற்றுக்கொண்டு, எப்படி உபாத்திமாருக்கு இதமாக நடந்து கொள்ளலாமென்று நல் மனதுடன் கருதலானேன். நான் சிறியவனாயிருந்தாலும் இரண்டு விஷயங்கள் எனக்கு தெளிவாய் புலப்பட்டது. ஒன்று, அதிகாரிகளுக்கு கீழ்ப்படிதல் முக்கியமானது; மற்றொன்று படிப்பில் விடாமுயற்சி அவசியம். அதே பிரகாரம் வித்யாசாலையின் அதிகாரிகளுக்கு மனப் பூர்வமாய் கீழ்ப்படிந்து நடந்தேன். படிப்பிலும் ஊக்கமாய் என் கவனத்தைச் செலுத்தி எந்த தமிழ் வாசகத்தையும் எளிதில் வாசித்து அறியக் கூடிய வனானேன். இன்னும் ஆறு மாதத்திற்குள் ஆங்கிலேய பதங்களில் நாலு எழுத்துக்கூட்டி வாசிக்கக் கற்றேன்.

நான் 1866-ஆம் இக்காலத்து எட்டாம் படிப்புக்கு (Form IV) சரியான வகுப்பில் படித்தேன். Matriculation பரீக்ஷையை ஒரு பெரிய மகிமையாக நினைத்தேன். அதற்காக இரவும் பகலும் வருந்தி படித்து சீக்கிரம் அந்த வகுப்புக்கு சேர முயன்று கொண்டிருக்கும் தருணத்தில், பயங்கர ஆபத்தான ஒரு வியாதியில் அகப்பட்டேன். மேற்படி வருஷத்தில் மோரிஸிலிருந்து (Mauritius) வெகுபேர் நல்ல திரவியம் சம்பாதித்துக் கொண்டு தரங்கம்பாடி கோட்டைக்குள் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் அத்தனை பேர் வருவதற்கு முகாந்தரம் என்ன வென்றால் அதற்கு முந்தின 1865-ஆம் முதல், மோரிஸில் பயங்கரமான கொள்ளை நோய் ஆன "நாவறட்சி காய்ச்சல்" (Yellow-fever) கண்டு வெகுபேர் மரித்துப் போனார்கள். அதற்கு பயந்து பல இந்தியர்கள் தங்கள் ஊருக்குத் திரும்பினார்கள். கொள்ளை நோய் அவர்களை இங்கும் தொடர்ந்து தரங்கையிலுள்ள ஜனங்களையும் பற்றிக் கொண்டது. எங்கள் பள்ளிக் கூடத்திற்கு எதிர்வீட்டில் மோரிஸில் இருந்து வந்திருந்த ஒரு கடியாரக்காரனைப் பிடித்தது அவனிடத்திலிருந்து ஊர் முழுமையும் பற்றிக் கொண்டது. தவிர, எங்கள் போர்டிங் பள்ளிக்கூடத்தையும் தொத்தினது. அப்போது சுமார் 100 பிள்ளைகள் இருந்தோம். முதலில் பாக்கியநாதன் என்ற ஒரு கொழுத்த வாலிபனைப் பிடித்து, அடுத்த நாளில் கொன்று விட்டது. அது கண்டவுடன் உடம்பில் கைவைக்க முடியாத காங்கையுண்டாகும். கண் இரத்த மயமாய் சிவந்து போகும். மூக்குக்குள் வெடித்து ரத்தம் வடியும். நாவு வறண்டு ஓட்டைப் போல் காய்ந்து விடும். சில மணி நேரங்களுக்குள் புத்தி மயங்கிப் போகும். புத்தி தெளிந்து செத்தவர்களை நான் அறியேன். பாக்கியநாதன் அப்படித்தான் இறந்தான். அவனுக்கு உதவி செய்த யோசேப்பு என்கிற மாயவரத்துப் பையன் அதே வியாதிகண்டு பயங்கரமாய் அவஸ்தைப்படுகையில்

அவன் மாயவரத்தில் எங்கள் வீட்டிற்கு அயல் வீட்டானுன படியாலும், எனக்கு சிநேகிதனுனபடியினுலும், நானே அவனுக்கு உதவி செய்ய வேண்டியவனுனேன். அவனும் 24 மணி நேரங்களுக்குள் இறந்து போனுன். பிறகு அந்த வியாதி எனக்கு வந்தது. அப்பொழுது பள்ளிக்கூடத்தை சில நாட்களுக்கு கலேத்து விட்டார்கள். என் அண்ணனுக்கு Fifth grade பரீக்ஷை தேறி, 1865-ஞு முதல், சிதம்பரத்தில் ஒரு உபாத்தியாயராக வேலே பார்த்துக் கொண்டிருந்தார். என் தாயார் அவருக்கு உதவியாய் சிதம்பரத்தி லிருந்தார்கள். என் தாயாரிடம் ஸ்மரணேயற்ற நிலேமையிலிருந்த என்னே அனுப்பி விட்டார்கள். அந்த நிலேமையில் எத்தனே நாள் இருந்தேன் என்று எனக்குத் தெரியாது. ஆனுல் ஒரு நாள் காலே 3 மணிக்கு எனக்கு ஸ்மரணே வந்தபோது விளக்கு எரிந்து கொண்டிருக்கிறதைக் கண்டேன். அந்நேரத்தில் நான் என் தாயார்வீட்டில் இருந்தது எனக்குத் தெரியாது. அது பள்ளிக்கூடத்தில் படிக்கிறதற்காகக் கொளுத்தப்பட்ட விளக்கு என்று நினேத்து பரபரப்பாய் எழுந்திருக்க முயன்றேன். ஆனுல் எவ்வளவு பிரயாசப் பட்டும் கையையாவது காலேயாவது ஊன்றவும் எழுந்திருக்கவும் முடியாமலிருந்தது. நான் ஏதோ அவஸ்தைப்படுகிறேன் என்று என் தாயார் கிட்ட வந்தார்கள். அவர்களேக் கண்டதும், "நான் படிக்கிற நேரத்தில் தொந்தரவு பண்ணுதேயுங்கள்" என்று சொன்னேன். அது அவர்கள் காதில் விழாமையினுல், என் வாயினிடத்தில் காது வைத்து கேட்டார்கள். அப்பொழுது நான் கோபமாய் "என் பேச்சு உங்களுக்கு விளங்கவில்லேயா?" என்று கேட்டேன். அவர்கள் என் காதினிடத்தில் வாய் வைத்து "உன் பேச்சு விளங்க உனக்கு நல்ல பெலன் வரவேண்டும், அது வரையில் பேசாமலிருப்பது நல்லது" என்று சொல்லி அளவில்லாத சந்தோஷப் பட்டார்கள். அவர்கள் களிப்புக்கு காரணம் பின்னுல் சுகமடைந்த காலத்தில் விசாரித்தபொழுது,

"இந்த வியாதி கண்டவர்களில் 100-ல் ஒருவர் கூட தப்பினது வருத்தம்; அதற்கு மருந்தே யில்லை; நான் பிழைத்தது தெய்வ எத்தனமான புதுமை; வியாதி தெளிந்தவரில் சிலர் கண்ணோ, காதோ வேறு அவ யவங்களோ கெட்டு உதவாமல் போனார்கள்; ஆண்டவர் ஏழை ஜெபத்தைக் கேட்டு உனக்கு எந்தக் கேடுமில்லாமல் சுகம் கொடுத்தார்," என்று சொன்னார்கள். நானும் என் தாயாரைப் பார்த்து, "அம்மா நான் இந்த வியாதி கண்ட நேரத்தில், நான் உயிர் பிழைத்தால், அந்த உயிரை ஆண்டவ ருக்கு கொடுப்பேன், என்று பொருத்தனை பண்ணினேன்" என்றேன். இந்த பொருத்தனை என் ஞாபகத்தை விட்டுப் போனதேயில்லை. ஆயினும் பின்னிட்ட காலத்தில், நான் வேதாந்தியாய் மாறினபோது, அது ஒருவாறு என் மனதில் மழுங்கிப் போயிற்று.

நான் சுகமாகி இரண்டுதரம் நல்ல ஸ்நானம் செய்த பிறகு, ஒரு நாள் கொல்லைப்புறத்தில் உட்காருகையில், "சர்" என்கிற ஒரு சத்தம் கேட்டது. அது நானே திடுக்கிட்டு என்ன வென்று பார்த்தபோது, என்னுடைய சிரசுமுதல் இடுப்பு வரையில் காய்ந்த தோல் பாம்பு சட்டையைப்போல் கழன்று விழுந்தது. அதன் பிறகு சிலகாலம் என்னைப் பார்க்கிறவர்கள் குழியிலிருந்து வந்த பிரேதத்தை பார்க்கிறது போல் பயந்தார் கள். ஆகிலும் நல்ல சுகம் அடைந்து 1867-ஆம் என் வகுப் பில் முதல் இடத்தையும், முதல் வெகுமதியையும் பெற்ற வனாய் Pre-Matriculation வகுப்பைச் சேர்ந்தேன்.

அப்பொழுது Matriculation வகுப்பில் பாடங்கொடுத்து தலைமுக உபாத்தியாயராயிருந்தவர் Charles Thambu Pillai Hensman. இவர் சென்னையில் பிரக்கியாதியாயிருக்கிற Mr. E. S. Hensman-க்கு மூத்த அண்ணன். அந்த காலத்

தில் இங்கிலீஷும் தமிழும் வெளிச்சமாய் அறிந்து கற்றுக் கொடுக்கத் திறமையுள்ள உபாத்திமார் இருந்ததில்லை. அவர்கள் சொல்லிக் கொடுத்த கல்வியும் மிகவும் நகைப்புக்கிடமானதாயிருந்தது. ஒரு திருஷ்டாந்தம் சொல்வேன்: நான் மூன்றுவது வகுப்பு மாணுக்கனுயிருக்கும்போது, என் உபாத்தியாயர் சுமார் 35 பிள்ளைகளுள்ள வகுப்பில் Pope ஐயருடைய 'முதலாம் இலக்கணம்' கற்றுக் கொடுக்கும் போது, பெரிய எழுத்திலுள்ளதை (சூ-ம் சூத்திரம்) முதலாம் என்றும், சின்ன எழுத்திலுள்ளதை (உ-ம் உதாரணம்) இரண்டாம் என்றும் கற்றுக்கொடுத்தார். தம்புப்பிள்ளை Hensman, உபாத்தியாயர்களின் ஆபாசத்தை யறிந்து, அந்த அந்த வகுப்பை பரீட்சை பண்ணித் திருத்துவார். அவர் எங்கள் வகுப்பில் குற்றியலுகரத்தைப்பற்றிய வினு விடையை பரீட்சித்தபொழுது, நாங்கள் பெரிய எழுத்திலுள்ளதை குருட்டுப் பாடமாய்ச் சொல்லி, சின்ன எழுத்திலுள்ளதை இரண்டாம் என்று ஆரம்பித்தோம். அவர் உடனே நிறுத்தி ஆளுக்கு இரண்டு அடி கொடுத்து, "அது இரண்டாமும் அல்ல மூன்றுமும் அல்ல. வருகிற முறை சரியாய் அறிந்து சொல்லுங்கள்" என்றூர். நாங்கள் உபாத்தியாயரிடம் கேட்ட பொழுது, "அது இரண்டாம் இல்லாவிட்டால், 'உம்' என்று சொல்லுங்கள் என்றூர். அவர் அடுத்தமுறை தப்பாமல் வந்து கேள்வி கேட்டபொழுது, நாங்கள் மிகத்தேறிவிட்டவர்கள்போல் சந்தோஷப்பட்டு, முதலாம் என்கிற சூத்திரத்தை சொல்லிவிட்டு சின்ன எழுத்திலுள்ள உதாரணத்தை 'உதாரணம்' என்று சொல்லத் தெரியாமல் உம்-நாகு, கஃசு, ஆடு என்று ஆரம்பித்தோம். அவர் மிகவும் கோபங் கொண்டு, பேருக்கு நாலு அடி கொடுத்து, அடுத்த முறை திருத்தமாய் கற்றுக்கொள்ளவேண்டுமென்று கற்பித்தார்.

அவருடைய முயற்சியினுல் என்ன நடந்ததென்று கேட்டால் அவர் செவ்வையாய் கற்ற உபாத்திமார்களை கீழ்வகுப்

பிலிருந்தே ஏற்படுத்தவேண்டுமென்று மிசியோன் அதிகாரிகளைத் தூண்டி அக்காலத்தில் மிசியோன் உபாத்திமார்களாவதற்கு போதனை பெற்றுக்கொண்டிருந்த வாலிபர்களை சிலமணி நேரம் தம்மிடத்தில் போதனுமுறை கற்றுக்கொள்ளும்படி செய்தார். மேலும், 1864-ஆம் முதல் மிசியோன் பாடசாலை அதிகாரியாயிருந்த Rev. E. Schaeffer-ஐ அக்காலத்தில் Anglo Vernacular School என்னும் பேரையுடைய தரங்கை Lutheran Mission பாடசாலையை Matriculation பரீட்சை வரையில் கற்பிக்கிற ஒரு பாடசாலையாக மாற்றும்படி சம்மதிக்கச் செய்தார். அவர் மிசியோன் அதிகாரிகளினுடைய சம்மதத்தின் பேரில் Central School என்கிற High School ஆக மேற்படி Anglo Vernacular பாடசாலையை மாற்றினார். அந்தப் பாடசாலையில் முதல் Matriculation பரீட்சை தேறினவர்கள், தற்காலத்தில் தரங்கையிலிருக்கிற பிரசங்கியாராக கீர்த்தி வாங்கின சங். ஞா. சாமுவேல் ஐயரும், பள்ளிக்கூடங்களிலும் காலேஜ்களிலும் சிறந்த வித்தை கற்பிப்பவன் என்று பேர் வாங்கின Mr. M. D. Masillamony Pillai-யும் தான். இவர் 1867-ஆம் தேறினவர்கள். அடுத்த வருஷத்தில் ஒருவரும் பரீட்சைக்குப் போகவில்லை. 1869-இல், என்னுடைய மூத்த சகோதரன் N. Jacob பிள்ளையும் நானும் Matriculation பரீட்சையில் தேறினோம்.

---

## அத்தியாயம் 5.

---

### உபாத்தியாயர் உத்தியோகமும் விவாகமும்.

என்னை பிள்ளையாக எடுத்து வளர்த்த Rev. J. M. N. Schwartz எனக்கு மாதம் ரூ. 7 உபகார கல்விச் செலவு (scholarship) நியமித்து, 1870-ம் வருஷத்தில் திருச்சினுப்பள்ளி S. P. G. Second Grade College-க்கு அனுப்பினார். அப்

பொழுது எனக்கு பிராயம் சரியாய் இருபது. நான் பீமா-நாய்க்கன் பாளையத்தில் குடியிருந்து கொண்டு திருச்சி தெப்பக் குளத்திற்கு எதிரில் உள்ள College-க்கு தினம் நடக்கவேண்டிய தாயிருந்தது. அந்தக் காலத்தில் F. A. வகுப்பில்* மாணுக்கர் மிகக்குறைவு. ஏனென்றால், பிரவேச பரீட்சை (Matriculation) கொடுத்தவுடன் சர்க்காரிலும் வேறு ஆபீசுகளிலும் இலேசாய் உத்தியோகம் அகப்படுமாதலால், வெகுபேர் F. A. பரீட்சைக்கு போகிற வழக்கம் இருந்ததில்லை. Junior F. A. வகுப்பில் என்னோடுகூட 7 பேர் மாணுக்கர் இருந்தார்கள். ஆறுமாதத் திற்குள், நானும், சிங்கம் ஐயங்கார், சடகோபாச்சார்லு என்ற இரண்டு பிராமணர்களும் தவிர, மற்ற எல்லோரும் வேலையில் அமர்ந்து போய்விட்டபடியால், Junior F. A. வகுப்பு ஜூலை மாதத்தோடு கலைந்து போயிற்று. அதன் பிறகு மேலதிகாரி களுக்கு என்னை எவ்விடத்திற்கு அனுப்புவதென்று தெரியா மல், என் காலம் 6 மாதம் வீணுய் கழிந்தது.

அடுத்த வருஷத்தில் (1871) தஞ்சாவூரில் வளமாய் வேலை செய்த S. P. G. Secondary College-ல் போய் படிக்க உத்திரவு கிடைத்தது. அங்கே அதே வருஷத்தில் பரீட்சைக்கு போகவேண்டுமென உத்திரவு செய்யப்பட்டது. நான் எவ்வளவு வருந்தியுழைத்தாலும், அந்த வருஷத்தில் புதிதாய் நியமிக்கப் பட்ட Trigonometry, Euclid Book XI என்ற பாடங்களை சரிவர கற்க முடியவில்லை. ஆகையால் அந்த வருஷத்து பரீட்சையில் இந்த பாடங்களில் நான் தேறுமல் பரீட்சையை இழந்தேன். என்னை வளர்த்த தகப்பனுகிய சுவார்ச்சு ஐயர் தரங்கையில் மிஷன் ஆலோசனை சங்கத்தலைவராக நியமிக்கப் பட்டபடியால், என் படிப்பை நிறுத்தி, தரங்கை L. M. Central

---

* அக்காலத்தில் B. A. பரீக்ஷைக்கு நேரே தாழ்ந்த பரீக்ஷைக்கு F. A. பரீக்ஷை என்று பெயர். அதாவது First Examination in Arts. தற்காலத்து Intermediate Examination-க்கு சரி.

பாடசாலையில் உபாத்தியாயராய் நியமித்தார். அப்பொழுது அந்த பாடசாலையில் தலைமை உபாத்தியாயர் மேல் கூறிய Mr. M. D. Masillamony B. A. இவர் புராதனமாய் புதுக் கோட்டை இலாக்காவிலுள்ள ஒரு வேளாள குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் Mathematics, English இரண்டிலும் இணையில்லாத கெட்டிக்காரர். இரண்டாவது உபாத்தியாயர் Mr. A. Pakiam Pillai; இவர் திண்டுக்கல் வேளாள Coleton போதகருக்கு உறவானவர். நான் மூன்றாவது உபாத்தியா யராக நியமிக்கப்பட்டேன். அந்தக்காலத்தில் Matriculation, Prematriculation, Form V. என்று உயர்ந்த வகுப்புகளுக்கு பெயர் இருந்தது. நாங்கள் மூவரும் முறையே மேற்படி வகுப்புகளுக்கு உபத்தியாயராயிருந்தோம்.

1872-வருஷத்தில் விவாகம் செய்துகொண்டேன். பெண் ணின் குடித்தன சாமர்த்தியத்தைப்பற்றி எனக்கு வேண்டிய வர்கள் நிரம்ப சொல்லியிருந்தார்கள். ஆகிலும் தஞ்சைக்குத் தெற்கேயிருக்கிறவர்களை அந்தக் காலத்தில் 'தெற்குத்தியார்' என்று இழிவாய் சொல்லுகிற வழக்கம் இருந்தது. நாடகங் களிலும் தெற்குத்தியார் வேஷம்போட்டு பழிப்பார்கள். அத னால் நான் தெற்கேயிருந்த அணைக்காட்டு பெண்ணை யெடுக்க மனதில்லாதிருந்தேன். என்னுடைய சிநேகிதர் அணைக்காடு நிரம்ப நாகரீகம் உள்ள இடம் என்றும், அங்குள்ள எல்லாரும் கிறிஸ்தவர்களென்றும், குணத்திலே மெத்த யோக்கியமான வர்களென்றும் சொன்னதினால், அவ்விடத்தில் பெண் கட்டி யிருந்த க. தெய்வசகாயம் உபதேசியாருடன் அந்த ஊருக்குப் போனேன். இவர் பின்காலத்தில் நாட்டையராகி, கலியா ணத்தின் மூலமாய் எனக்கு சகலனானார். இவர் நல்ல உத்த மர். எனக்கு ஊரும் பெண்ணும் மனசுக்கு பிடிபட்டது. பரிசம்போட்டு வந்தேன். இது நடந்தது 1871-வருஷம் ஜூன்மீ. அப்பொழுது தஞ்சையில் F. A. மாணாக்கனாயிருந்தேன். அச்

சமயத்தில் பெண்ணுக்கு பரிசம் போட்டதற்குக் காரணம் யாதெனில், தஞ்சையில் "நான், நீ" என்று பெண் கொடுக்க அநேகர் என்னை அலட்டினபடியால் அந்தத் துன்பத்திலிருந்து விடுதலையடைய என் சிநேகிதரினுடைய ஆலோசனையின்படி இப்படி செய்ய நேர்ந்தது. பரிசம்போட்ட பிற்பாடு பெண் பேச்சு பேசுவார் ஒருவருமில்லை. ஏறக்குறைய எனக்கும் என் பெண்சாதிக்கும் ஒரே வயசு. எங்களுக்கு கலியாணம் நடந்தது 1872-ஹு ஜூலைமீ 31உ, அல்லது ஆடிமீ 18உ. வெகு பேர் ஆடி மாதத்தில் கலியாணம் உதவாதென்று அவபக்தியினால் தடுக்கப்பார்த்தும், ஆண்டவர் உண்டாக்கின நாளெல்லாம் நல்ல நாளென்று கலியாணஞ் செய்தேன். அது வரையில் ஆருமாதம் உத்தியோகம் செய்து மாதம் ரூ. 14 சம்பளத்தில் ஏறக்குறைய ரூ. 84 மாத்திரம் என் கையில் சேர்ந்திருந்தும், அதில் எனக்கும் என் தம்பிக்கும் சாப்பாட்டுக்கு செலவிட்டது போக கலியாணத்திற்கு ரூ. 35 மாத்திரம் இருந்தது. அதற்குள்ளாகவே கலியாணத்தை முடிக்க தீர்மானம் பண்ணினேன். அந்த விபரம் வருமாறு :—

ரூ. 8-ஐ எனக்கும் என் பெண்சாதிக்கும் ஒரு மாத சாப்பாட்டுக்கு முன்முதலாக ஒருவரிடத்தில் கொடுத்து வைத்து, மீதி ரூ. 27-ல் ரூ. 16-க்கு கொர்நாட்டு சேலை கூரைப்புடவையாகவும், எனக்கு ரூ. 5-ல் வெள்ளை மல்பீஸ் ஒன்றும் வாங்கிக்கொண்டு, கையில் மீதி ரூ. 6-உடன் அணைக்காடு போய் சேர்ந்தேன். அப்பொழுது என் பெண்சாதியினுடைய மூன்று சகோதரர் அந்த ஊரில் முதல்தர செல்வமுள்ளவர்களாய் வாழ்ந்தார்கள். கலியாண செலவு முழுமையும் அவர்களே பொறுத்தார்கள். கூரைச்சேலை ரூ. 16-க்கு வாங்கினதைப் பார்த்து மெத்த விசனப்பட்டார்கள். "குறைந்தது ரூ. 40-க்கு வாங்கக்கூடாதா?" என்று திட்டினார்கள். பிறகு, நான் கலியாணத்திற்கு சரிகை வேஷ்டி கொண்டு வந்

திருப்பேன் என்று நினைத்திருந்தார்கள். ஆனால் நான் முழு வதும் வெள்ளை உடுத்து பள்ளிக்கூடத்துக்குப் போகிற தலைப் பாகையையும் வைத்து கால்நடையாய் புறப்பட்டேன். மதுக் கூர் பாளையக்காரன் (Zamindar) குதிரை வந்திருந்தது. அது சகல ஜோடிப்புடன் இருந்த பொழுது என்னுடைய சாதா உடையோடு ஏற மனமில்லை. ஆகையால் கால்நடையாகவே கோவிலுக்குப் போனேன். என் மைத்துனன்மாருக்கு அதில் பெரிய விசனம் வந்தது. கோவிலில் தாலி கட்டிமுடிந்ததும் பல்லக்கில் ஏறச்சொன்னார்கள். அதுவும் எனக்கு சம்மதமில் லாமல் இருந்தும், ஜோடியாய் திரும்பவேண்டும் என்கிற ஊர் வழக்கத்திற்கு இணங்கி சம்மதித்தேன். ஊர் ஜனம் முழுமை யும் கலியாண வீட்டில் சாப்பிட்டதால், காலை 3 மணி வரையில் சாப்பாடு நடந்துகொண்டே யிருந்தது. நான் 3-ம் நாள் தரங் கைக்கு பெண்சாதியுடன் திரும்பிவிட்டேன். எல்லாரும் பிச் சைக்கரானுக்கு பெண் கொடுத்ததைப்பற்றி விசனப்பட்டார் கள். கலியாணத்திற்கு செலவு செய்து விட்டோம்; ஆகையால் சீதனம் கொடுக்கமாட்டோமென்று ஒட்டாரமாய் சொல்லி விட் டார்கள். எனக்கு வேண்டியதெல்லாம் பெண்ணே தவிர சீதனம் அல்ல. ஆதலால் என் பெண்சாதிக்கு அவர்கள் முன்னமே போட்டிருந்த சுமார் ரூ. 200 பெறுமான நகைகளுடன் தரங்கைக்கு வந்து சேர்ந்தேன். தரங்கையில் எங்களை சந்தித்த சிநேகிதர், நான் ஒல்லியாகவும் என் பெண்சாதி புஷ்டியாகவும் இருக்கிறதைப் பார்த்து "ஐயா கதிர்போலவும், அம்மாள் குதிர்போலவும் இருக்கிறார்கள்" என்று கேலி செய்தார். இப்பொழுது அதற்கு நேர் விரோதமாக ஆகிப்போனும்.

பெண்சாதி கையில் ரூ. 8 கொடுத்து, குடுத்தனத்தை ஆரம்பிக்கச் சொன்னேன். என் பெண்சாதி நாட்டுப்புறத்தா ளானதால் அந்த காலத்தில் அ என்கிற அட்சரம்கூட தெரியா மல் இருந்தாள். பிறகும் படிக்க மனமில்லாமல் போனாள்.

ஆகிலும் வேத அறிவும், ஞான ஜீவனும் அவளுக்கு உண்டு. அவளுடைய குடுத்தன சாமர்த்தியத்தினால் மிசியோன் ஊழியத்தில் சொற்ப சம்பளக்காரனாயிருந்தும், இதுவரையில் கடனில்லாமல் காப்பாற்றப்பட்டிருக்கிறேன்.

1874-ஆம் நான் F. A. பரீட்சையில் ஏகாந்தமாய் (private) படித்து ஒப்பேறினேன். அதன் பிறகு எனக்கு சம்பளம் ரூ. 20 ஆயிற்று. 1879-ஆம் வரையில் இதே சம்பளம் இருந்தது. இந்த ரூபாயில் என் தாயாருக்கு மாதம் ரூ. 3 அனுப்பினேன். அக்காலத்தில் ரூபாய்க்கு பெரிய படியால் $12\frac{1}{2}$ படி அரிசி விற்றது. 1878-ஆம் வரையில் தமிழ் கல்விக்காக என் கையில் மீதியான சொற்ப பணங்களெல்லாவற்றையும் செலவிட்டேன். என் காலத்து இலக்கிய இலக்கணங்களில் தமிழ் வித்வான்களுக்கு இணையானேன். பலபல இடங்களில் பேர்போன வித்வான்கள் என்னைத் தேடியும் நான் அவர்களைத் தேடியும் போக்குவரத்து செய்ததுண்டு. பழைய காவியங்களும் பழைய இலக்கணங்களும் பயின்று நல்ல மதிப்புடன் இருந்தேன். தவிர, என் இங்கிலீஷ் உபாத்தியாயரான Shaeffer ஐயரிடத்தில் லத்தீன் பாஷையும் படித்தேன். 1878-ஆம் நடந்த Precis பரீட்சையில், ராஜதானியில் இன்னொருவனுடன் முதலாவதாகத் தேறினேன். இதனால் நான் அந்தக்காலத்திலேயே சர்க்கார் உத்தியோகத்தில் நல்ல சம்பளத்திற்கு அமர்ந்து, மேன்மையான உத்தியோகத்திற்கு வரக்கூடியதாயிருந்தும் ஆண்டவர் என்னை தம்முடைய ஊழியக்காரனாக்க மனம்வைத்து தடுத்துவிட்டார். நான் Translator வேலையில் அமரக்கூடியதாயிருந்தும் என்னை வளர்த்த தகப்பனாகிய சுவார்ச்சையர், நான் தனக்குப்பின் தெய்வ ஊழியம் செய்ய வற்புறுத்தினதினால், நல்ல சம்பளத்திற்குப் போகாமல் இருந்துவிட்டதைக் குறித்து, என் தாயாரும் பெண்சாதியும் மிகவும் மனவேதனைப்பட்டார்கள்.

# அத்தியாயம் 6.

---

## வேதசாஸ்திரப் பயிற்சி.
## தஞ்சாவூரில் பிரசங்கியார் உத்தியோகமானது.
## குருவபிஷேகம்.

தரங்கையைச் சேர்ந்த பொறையாற்றில், 1879-ஆம் ஒரு புது வேதசாஸ்திர வகுப்பு ஏற்படுத்தப்பட்டது. அதில் என்னைக்கூட்டி 6 பேர் மாணுக்கரானேம். மூன்றுபேர் எங்களுக்கு போதனுசிரியர்களாய் இருந்தார்கள். அவர்கள் Rev. K. Ihlefeld, Dr. A. Blomstrand, Rev. H. Bisenherz. இவர்களில் வேதசாஸ்திரமும் வேதசாஸ்திர சரித்திரமும் பாடஞ்சொன்னவர் Ihlefeld. இவர் பழைய ஏற்பாட்டின் தீர்க்கதரிசனங்களையும் லுத்தரன் விசுவாச அறிக்கையாகிய அகுஸ்தாபுரி விசுவாச அறிக்கையையும்(Augsburg Confession) விஸ்தரித்தார். Blomstrand திருச்சபை சரித்திரமும் பழைய ஏற்பாட்டுக்கு வியாக்கியானமும் போதித்தார். Bisenherz புதிய ஏற்பாட்டுக்கு வியாக்கியானம் போதித்தார். மூன்று பேருக்கு Ihlefeld கிரேக் பாஷையைப் போதித்தார். மற்ற மூவரும் போதுமான கல்வி கற்காதவர்களாதலால் கிரேக் பாஷை படிக்கவில்லை. 1879-ல் துவக்கின வேதசாஸ்திர வகுப்பு 1881-ல் முடிவுபெற்றது. நான் தரங்கை Central-School-ல் உபாத்தியாயராயிருந்தபடியினுல் 1879-ம் ஆண்டிலேயே வேதசாஸ்திர வகுப்பில் சேரமுடியாமற் போயிற்று. பத்திரிகை வாயிலாய் எனக்கு பதில் உபாத்தியாயர் அகப்பட்டபின் மாத்திரம் 1880-ல் வேதசாஸ்திர வகுப்பில் சேர்ந்து மூன்று வருஷத்திய பாடங்களை இரண்டே வருஷத்தில் படிக்க நேர்ந்தது. 1880-ம் ஆண்டு நாலுபேருக்கு ஜெர்மன் பாஷை கற்றுக்கொடுக்கப்பட்டது. அவர்களில் நான் ஒருவ

னல்ல, எனக்கிருந்த லத்தீன் அறிவைக்கொண்டு ஹுத்தரன் வேதசாஸ்திரங்களைச் செம்மையாய் அறியக்கூடும் என்று நினைத்து, கிரேக் பாஷைமாத்திரம் கற்றேன். அது எங்கள் போதகராகிய Ihlefeld-க்கு பிரியமில்லாதிருந்தது. என்னையும் தூண்டும்படி அவர் ஓர் புது மிசியோன் சட்டம் ஏற்படுத்தினார். அது என்னவென்றால்—இனி Leipzic மிஷனில் சுதேச குருக்களில் யார்யாருக்கு German புஸ்தகம் வாசிக்க வருமோ அவர்களுக்கு சம்பளத்துடன் ரூ. 5 மாதாந்திரம் கவர்தை சம்பளமாக (honorarium) கூட்டிக் கொடுக்கப்படும் என்பதுதான். இந்தச் சட்டம் ஏற்பட்டது 1881-ஹு மேயீ. 'மே' மாதம், 'சூன்' மாதம், 'சூலை' மாதம் பாதியும் எங்கள் வேதசாஸ்திர வகுப்புக்கு வருஷந்தோறும் விடுமுறை. இந்த விடுமுறைக்குள் நான் ஜெர்மன் பாஷையைத் தனியே கற்கத் துணிந்து, Hans German Course முதலாம் இரண்டாம் பகுதிகளை அவற்றின் திறவுகோலோடு வாங்கி இரவு பகல் உழைத்தேன். உச்சரிப்பு தவிர மற்ற எல்லாவற்றிலும் எனக்குமுன் ஜெர்மன் ஒன்றரை வருஷமாய் படித்த மற்றவர்களிலும் அதிக திடமானேன். இது ஜெர்மன் வகுப்பு சூலையில் துவங்கினபொழுது எங்களுக்குப் போதித்த Mrs. Ihlefeld அம்மாளுக்கும், எனக்கும் ஆச்சரியத்துடன் தெரிய வந்தது. முந்தின வகுப்பார் Harms என்ற வேதபண்டிதரின் சிறந்த பிரசங்கங்களை மேற்படி அம்மாளின்கீழ் மொழிபெயர்த்துக் கொண்டிருந்தார்கள். நான் "என்னையும் ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று கேட்டபோது, அந்த அம்மாள், "பிரயோஜனம் இல்லை. இவர்களுக்கு உயர்ந்த பாடமும், உனக்கு தாழ்ந்த பாடமும் என்றால் சொல்லமுடியாது" என்றார்கள். நான், "என்னை இந்த உயர்ந்த பாடக்காரருடன் சேர்த்துப் பாருங்கள். சரிப்படாவிட்டால் நின்று போகிறேன்" என்றேன். அந்த அம்மாள் நகைத்து, எனக்கொரு புஸ்தகம் கொடுத்து படிக்கச் சொன்னார்கள். நான் இங்கிலீஷ் பாஷை

யைப் படிக்கிறதுபோல படித்தபோது, எல்லாரும் குலுங்க நகைத்தார்கள். "உச்சரிப்பு எனக்கு தெரியவராது. அர்த்தம் தெரியும்" என்றேன். மொழிபெயர்க்கச் சொன்னார்கள். நாலுபேரும் அரைமணி நேரம் கஷ்டத்தோடு மொழிபெயர்த்ததை நான் மூன்று நிமிஷத்தில் மொழிபெயர்த்து, பின்னும் சில நிமிஷங்களில் அன்று அவர்களுக்கு குறித்திருந்த முழுப் பாடத்தையும் மொழிபெயர்த்து விட்டேன். அந்த அம்மாள் இந்த அதிசயத்தை ஐயரிடம் ஓடிப்போய்ச் சொன்னார்கள். அவர் ஒரு ஜெர்மன் ஞானோபதேச உச்சரிப்பைக் கையோடு கொண்டுவந்து மொழிபெயர்க்கச் சொன்னார். நான் எவ்வித தடங்கலும் இல்லாமல் செவ்வையாய் மொழிபெயர்த்தேன். அவர் பிரமித்து "இப்பொழுது நீ மேல் வகுப்பைச் சேர்ந்தாய். இவர்கள் கீழ் வகுப்பில் இருக்கிறார்கள்" என்று மெச்சினார். அந்த வருஷக் கடைசியில் எங்களோடு ஜெர்மன் பாஷை பரீட்சைக்கு எங்களுக்கு நாலுவருஷங்களுக்கு முந்தியே குருப்பட்டம் பெற்றிருந்த சங். ஞா. சாமுவேல் ஐயரும் வந்தார். அவர் 1868-ம் வருடமுதலே ஜெர்மன் ஆரம்பித்து அந்த பாஷையில் தேர்ச்சியடைந்திருந்தார். அவரைக்கூட்டி நாங்கள் 6 பேரும் ஜெர்மன் பாஷையில் தேறி ரூ. 5 கவர்தைச் சம்பளம்வாங்கலானோம். அச்சம்பளம் இக்காலம் வரையில் எனக்கு நடந்து வருகிறது. அதைக்கொண்டுதான் நான் புஸ்தகங்களை நாளடைவில் வாங்கி ஒரு புஸ்தகச் சேர்ப்பு வைத்திருக்கிறேன்.

நான், மிசியோன் ஒழுங்கின்படி, முதலில் பிரசங்கியாராக தஞ்சாவூருக்கு மாற்றப்பட்டேன். அங்கே என்னுடன் தரங்கை Central School-இல் Principal ஆக வேலை பார்த்த Rev. K. Pamperin மிஷனரியாய் இருந்தார். எனக்கும் அவருக்கும் நல்ல சிநேகம் முந்தியே ஏற்பட்டிருந்ததால் அவருக்குக் கீழ் பிரசங்கியாராய் இருப்பது எனக்கு முதல் பிரியமாகவேயிருந்தது. இருந்த சுயாதீனம் பிரசங்கியார் வேலையில் அற்

றுப்போகு மென்று எனக்கு முன்னே தெரிந்ததில்லே. ஐரோப்பியகுருவும் சுதேசகுருவும் நகமும் சதையும்போல் வேலே செய்யலா மென்று நான் நினைத்திருந்தது முழுவதும் ஓடிப் போயிற்று. என் சிநேகிதனுகவிருந்த Pamperin என்னைப் பார்த்ததும், " இனி, நான் உனக்கு எசமான்; நீ எனக்கு கீழ் வேலேக்காரன் என்பதை மறக்காதே. நான் சொல்லுகிற வேலேயைத்தான் நீ செய்யவேண்டும்" என்று வற்புறுத்திச் சொன்னுர். அதுவும் தவிர, அவர் அந்தக்காலத்தில் அம்மாள் (பெண்சாதி) பேச்சை மீருததினுல், எல்லோரும் அம்மாளுடைய தயவையே தேடவேண்டியதாயிருந்தது. எனக்கு அந்தப் பழக்கம் இல்லாமையினுல் நான் அம்மாளே மட்டுக்கு மிஞ்சி எண்ணினதில்லே. அதனுல் அந்த அம்மாளின் கோபம் என்மேல் வல்லமையாய் இறங்கிவந்தது.

அவர் எனக்கு ஒவ்வொரு நாளும் 'இங்கே போ" 'அங்கே போ' என்று ஏவிக்கொண்டிருந்ததில், எனக்கு கர்த்தருடைய வேலே இன்னதென்று விளங்காமல் மனுஷனுக்கு வேலேக்காரனுயிருக்கிறேனே என்று மனம் கலங்கிற்று. என் வேலே இன்னதென்று முன்னமே அறிந்து, அதைக் குறித்து ஆலோசித்து, ஜெபத்தில் தேவ ஒத்தாசையைக்கேட்டு, புத்தியாய் செய்ய முடியாமல் இருந்ததைக் குறித்து, விசனத்துடன் ஆண்டவரிடம் நாலு வரங்களேக் கேட்டேன். அந்த வரங்களேக் கேட்டது இரண்டாந்தரம். அவையாவன :—

(1) 'மனுஷ பயம்' என்பதை என்னிடமிருந்து முற்றிலும் எடுத்துவிடவேண்டியது.

(2) 'காசாசை'யை அடியோடே நீக்கிவிடவேண்டும்.

(3) 'காசுக் கஷ்டம்' உண்டாகும்போது, ஒத்தாசை நான் ஒரு மனுஷனிடமும் கேட்கமாட்டேனுகையால், தேவனே என் கஷ்டத்தை நேரில் நீக்கவேண்டும்.

(4) திருவசனத்தை முழுத்தெளிவாய் தேவனே எனக்கு விளங்கவைக்கவேண்டும்.

ஆண்டவர் இந்த வரங்களை கொடுத்தார் என்பது நிச்சயமாய் இருந்தது. நான் Pamperin-இடத்தில் "என் வேலை இன்னதென்று திட்டவட்டமாய் வகுத்துக் கொடுத்துவிட வேண்டும்; மற்றபடி நான் யோசித்து வேலைசெய்யக்கூடவில்லை" என்று சொன்னேன். அதற்கு அவர், "உன் யோசனையல்ல, என் யோசனையே நடக்கவேண்டும்" என்றார். "நான் அப்படி வேலை செய்ய மாட்டேன்" என்று மறுத்துவிட்டேன். அதற்குமேல் அவர் மேலானவர்களுக்கு எழுதி தெரிவிக்க அவர்கள், "நான் சொன்னது சரி" என்று அவருக்கு ஆலோசனை கொடுத்து எனக்கு வேலையில் வட்டம் பிரித்துக் கொடுக்கச் சொன்னார்கள். அதின்மேல் "தெற்கும் கிழக்கும் உனது, வடக்கும் மேற்கும் எனது" என்று தீர்த்தார். நான் சரியென்று எனக்கு அகப்பட்ட ஏழு கிராமங்களில் திருவேலையில் கண்வைத்து பார்த்தேன். ஆகிலும் ஐயரும் அம்மாளும் என்மேல் வைத்திருந்த காரம் குறையவில்லை.

தன்னதிகாரத்தை பயங்கரமாய் செலுத்தவேண்டுமென்கிற ஆசை Pamperin ஐயருக்கு ஒழியவில்லை. அதினால் அவர் பலமுறை வெட்கமடைய நேர்ந்தது. அவற்றுள் ஒன்றுமாத்திரம் சொல்வேன். இது நடந்தது 1882-ஆம். ஒருநாள் ஆறு மைல் தூரத்துக்கு அப்பாலேயிருந்த 'குடிக்காடு' என்கிற கிராமத்திலிருந்து ஒரு ஓலைச்சுருள் எழுதி ஓர் ஆதிதிராவிடன் கையில் அனுப்பப்பட்டது. அதைப்படித்ததும் அதிலிருந்த ஆவசியகமான சங்கதியைச் சொல்ல Pamperin ஐயரைத் தேடிப்போனேன். அவர் அம்மாளுடன் 'சக்கரான்' சாயபு வினரண்மனைக்குப் பல வெள்ளைக்காரருடன் விருந்துண்ணப் போயிருந்தார். நான் தாமதம் பண்ணாமல் உடனே

'குடிக்காடு' போக நேர்ந்தது. ஏனென்றால், சாந்தப்பன், ஆசீர்தவாம் என்ற இரண்டு சகோதரர்கள் பாக வழக்கிட்டு, ஒருவரையொருவர் கொல்வதற்கு அவரவர் கக்ஷிக்கு ஆள்சேர்த்து வைத்திருந்ததாகவும், நான் உடனே புறப்பட்டுவந்து கலகத்தை அடக்க வேண்டுமென்பதாகவும் எழுதியிருந்தது. நான் கிராமத்தையடைந்தபொழுது இருட்டு நேரமாயிருந்தது. இரா முழுவதும் கக்ஷிக்காரரை அமர்த்தி, தடிகளையொரு குவியலாய் போடுவித்து, அவரவர் வழக்கை ஒழுங்காய் சொல்லும்படி சொன்னேன். மூத்தவனாகிய ஆசீர்வாதம், "உமக்கு கிராம வழக்கு தெரியாது. என் வழக்கையுமக்கு சொல்லமாட்டேன்' என்றான். நான் சாந்தமாய் பேசி, "எந்த வழக்கையும் தெளிவாய் அறிய என்னால் கூடும்" என்றேன். அதன்பிறகு, தன்னுடைய சாக்ஷிகளுடன் தன் வழக்கை சொன்னான். அதுவே சரியான வழக்காக என் மனதில் பட்டது. என்னவெனில், "என் தம்பிமார்கள் எல்லாரும் நிலத்தையுழுது, பிழைக்க பிரியமில்லாமல், தங்கள் தங்கள் பாகத்தைக் குறித்து எவ்வித ஒழுங்கும் செய்யாமலும் வெளித் தேசங்களுக்குப் போய்விட்டார்கள். அவர்களுடைய பங்கை எவன் நினைத்தானோ அவன் கட்டிக்கொள்ளக்கூடும். அப்படியிருந்தும் நான் எல்லா பங்குகளையும் காப்பாற்றி சர்க்கார் வரியையும் கொடுத்து வந்திருக்கிறேன். இந்த சாந்தப்பன் Head Constable வேலையில் 27-வருஷம் இருந்து ஊர் சொத்தையெல்லாம் சம்பாதித்துக்கொண்டு, என் பங்கை விடு என்று என்னிடத்தில் வழக்கிட்டால் அது சரியா? சரியல்லாதிருந்தும், என்னைக் கொல்லுகிறதற்கு ஆள் சேர்த்திருக்கின்றானே! அவன் கொன்றாலும், சர்க்கார் 'லா' வெல்லாம் அவனுக்கு தெரியும். நீங்களும் அவன் பங்கிலிருந்துதான் பேசுவீர்கள்" என்றான். அப்புறம் Head Constable சாந்தப்பனைக்கேட்டபோது, அவன் தமையன் சொன்னபடி பல 'லா' வெல்லாம் பேசினான். அவன் சொன்னது எனக்கு ஒன்றும் சரிப்படவில்லை. இதற்குள்

பொழுது விடிந்தது. மறுநாள் ஊரில் பெரிய மனுஷரையும் கர்ணத்தையும் கூப்பிட்டேன். "தாயைக் கொன்றவனுக்கு ஊரிலே பாதி" என்ற பழமொழிப்படி Head Constable பக்கத்தில் வெகுபேர் சேர்ந்து கொண்டார்கள். அவன் ஊரைக் கிளப்பிவிட்டு குடியை கெடுத்துவிடுவான் என்ற பயத்தினுல் அப்படி செய்தார்கள். மூத்தவன், இனி நான் அநியாயம் செய்வேன் என்று பயந்து, "நீர் வந்தவழியே திரும்பும். இனி என் கையால் ஆனதைப் பார்த்துக்கொள்ளுகிறேன்" என்றான். இரண்டாம் நாள் பொழுதுபோய்விட்டது. எனக்கு பசிக்களை வந்துவிட்டது. இரண்டு இளநீர் தருவித்து சாப்பிட்டு செய்ய வேண்டியதைக் குறித்து யோசித்தேன். பிறகு விளக்கு வைக்கச்சொல்லி, கொஞ்சம் அதிகாரத்துடன் சாந்தப்பனை யழைத்து, "நான் மனச்சாக்ஷியின்படி தீர்ப்பு சொல்லு கிறேன். நீர் வயசில் இளையவர். இவர் உமக்கு தமையன் மாத்திரம் அல்ல, தகப்பனுடைய ஸ்தானத்திலும் இருக்கிறார். வேட்டியை வரிந்து இடுப்பிலே கட்டும்" என்றேன். எதிர் பேசாமல் வேட்டியைக் கட்டினன். "தமையன் காலில் நெடுஞ்சாங்கடையாய் விழும்" என்றேன். எதிர்த்துச் சொல்லாமல் விழுந்தான். "நான் சொல்லுகிறபடி சொல்லும்" என்றேன். "அண்ணு! நீ எனக்குத் தகப்பன். உனக்கு ஆபத்துக்கு நான் ஒருவனே உதவவேண்டியவன். என்மேல் தயவுவைத்து நம் முன்னோர் நிலத்தில், உனக்கு எது இஷ்டமோ அதைக்கொடு; நான் உன் காலடியில் விழுந்து கிடக்கிறேன். நான் செய்ததை யெல்லாம் மன்னி. எனக்கு பிச்சை கொடுக்கிறதுபோல் ஏதாகிலும் கொடு." என்று சொல்லச் செய்தேன். அவன் அதைச் சொல்லும்போதே கதறி அழுதான். தமையனும் அழுது, தம்பியைத் தூக்கி யெடுத்து, அந்தச் சபையிலே ஏடும் எழுத்தாணியும் தருவித்து, அவன் சாந்தப்பன் பாகம் முழுவதும் எல்லை குறித்து எழுதிக் கொடுத்தான். அதுமுதல் இருவரும் வலது இடது கைபோல் நேசமா

யிருந்தார்கள். பார்த்தவர்களுக்கெல்லாம் வியப்பைக் கொடுத்தது. இது நிற்க.

மறுநாள் காலையில் சூரியோதயத்திற்கு முன் தஞ்சாவூரிலிருந்தேன். விடிந்தவுடன் உபதேசியார் என்னிடம் வந்து, " Pamperin ஐயர் உங்கள் மேல் மிகவும் கோபமாயிருக்கிறார். நீங்கள் ஒன்றுமே சொல்லாமல், ஊரைவிட்டுப்போய் இரண்டு நாள் தங்கியிருந்த குற்றத்திற்காக, உங்களுக்கு அபராதம் போடுவேன் என்று சொல்லுகிறார்." என்றார். நான் வழக்கம் போல் காலைச்சாப்பாட்டிற்குப்பின், Pamperin ஐயரை பார்க்கப்போனேன். அவர், " உபதேசியார் ஏதாகிலும் சொன்னாரா ? " என்று கேட்டார். நான், " அவர் சொன்னது இருக்கட்டும். நீர் என்ன சொல்லுகிறீர் ? " என்றேன். " அவர் மூலமாய் சொன்னதை நேரில் சொல்லுகிறேன். உமக்கு ரூ. 1 அபராதம் விதித்திருக்கிறேன் " என்றார். நான் புன்சிரிப்புடன், " இந்த ராஜீன பத்திரத்தை (Resignation) நம் மேலான ஆலோசனை சங்கத்தாருக்கு அனுப்பிவிடும். அவர்களுக்கு நான் 15 நாள் தவணை கொடுத்திருக்கிறேன். அதற்குள் பதில் வராவிட்டால், நான் என்னிஷ்டம்போல் இடத்தை விட்டுப்போவேன். இந்த 15 நாளில், ஒரு தினமாவது வேலைக்குவெளியே போக மாட்டேன்." என்று சொல்லி ராஜீன பத்திரத்தைக் கொடுத்துவிட்டு, வீட்டுக்குத் திரும்பினேன். அவர் காரணம் ஒன்றுமே செப்பாமல் நான் ராஜீன பத்திரம் கொடுத்ததையும், காரணம் மேலானவர்களால் அதிகாரம் பெற்றவருக்கே சொல்லுவேன் என்று செப்பியிருந்ததையும், வாசித்து பயந்துபோனார். சாயந்திரம் என்னைத் தேடிவந்து, " தயவுசெய்து காரணத்தை யெனக்கு சொல்லும் " என்று கேட்டுக்கொண்டார். " பத்திரத்தை யனுப்பும். சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லிக்கொள்வேன்." என்று உறுதியாய் நின்றேன். அவர் அனுப்பினார். மூன்றும் நாளே,



தேவசகாயம் ஐயர் வாலிபனாயிருந்தகாலத்தில் இந்த படம் எடுத்திருக்கவேணும். மேலும் குருப்பட்டமும் பெற்ற சமயம்.

ஆலோசனை சங்கத்தார் அதிகாரங் கொடுத்து, ஒருவரை யனுப்பினார்கள். அவரிடம் நான் சொன்னதாவது: "எனக்கென்று ஆலோசனை சங்கத்தாரால் பிரிக்கப்பட்ட வட்டத்தில், பிராண அபாயம் வராமல், இரண்டு நாள் பசியோடு என் வேலையை செய்து திரும்பினதற்கு, சக்கராம் சாயுபு வீட்டில் விருந்துண்ண போயிருந்த இவர் ரூ. 1 அபராதம் போடுகிறதினால், நான் நினைத்தபடி மிசியோன் வேலை தெய்வ ஊழியம் அல்ல; கேவலமான மனுஷ ஊழியம். ஆகையால் உங்கள் ஊழியம் எனக்கு வேண்டாம்" என்றேன். அவர் பாதபக்ஷமில்லாமல், Pamperin ஐயரை கடுமையாய் கடிந்துகொண்டு, "நீர் இவரிடத்தில், எனக்கு முன்பாக மன்னிப்பு கேட்க வேண்டும்" என்று உறுதியாய் நின்றார். Pamperin மன்னிப்பு கேட்டார். அதன் மேல் என் ராஜீன பத்திரத்தை வாப்ஸ் செய்துகொண்டேன். பிற்பாடு Pamperin என்னிடத்தில் மரியாதையாகவே நடந்துகொண்டார்.

1883-ஆம் கடைசியில் எனக்கு குருபட்டத்துக்குரிய பரீக்ஷை வியாசங்கள் குறிக்கப்பட்டன. அதற்கு நியமித்த காலம் இரண்டு மாசம். அவை எழுத ஏறத்தாழ கடைசி வரையில் தொடர்ந்த நேரம் அகப்பட்டதில்லை; தவிர, நான் லுத்தரன் விசுவாச அறிக்கைகளையும் வேதவசனத்தோடு ஒத்துப்பார்த்து, எது சுத்த போதகம் என்று நிதானித்து, என் மனதுக்கு தெளிந்த போதகத்தை அது எந்த அறிக்கையின் போதகமானாலும் ஒப்புக்கொள்வேன் என்று தீர்மானித்தேன். இந்த ஆராய்ச்சியின் துவக்கத்தில் மேற்படி வியாசங்கள் வந்ததினால், மாய்மாலமாய் அவர்களுக்கு லுத்தரன் உத்தரம் சொல்லி குருப்பட்டம் வாங்கிக்கொள்வது எனக்கு வெறுப்பாயிருந்தது. ஆகிலும் வந்த வியாசங்கள் நான் ஆராய்ந்து தெளிந்த விஷயங்களானதாலும், நல்ல நிதானிப்புடன் என் வியாசங்களை எழுதியனுப்பினேன். அவைகள்

குருப்பட்டத்திற்கு அங்கீகரிக்கப்பட்டும் வழக்கமாய் வருத் திருந்த வேதசாஸ்திரப் பாட்டையில் போகாமல், என் சுய பாட்டையிலே போனபடியால், என் மேலானவர்கள் அது தப்பு போதகத்திற்கு வழி திறக்குமென்று அஞ்சி, லூத்தரன் வேதசாஸ்திரிகள் அநேக நூற்றாண்டுகளாய் வருத்து குறித்த பாதையிலேயே என் நினைவு செல்லவேண்டுமென்று எச்சரித் தார்கள். அவர்களுக்கு, "நான் மனுஷர் கட்டளைக்குப் பயப்படமாட்டேன்; சுத்த போதகம் எதுவோ, அதை யார் போதித்தாலும் ஒப்புக்கொள்வேன்; வேதத்தைதவிர எந்த மனுஷ அதிகாரத்தையும் ஒத்துக்கொள்ளேன்" என்று மறுத்து விட்டேன். அதன் பிறகு என்னுடைய உபதேசம் லூத்தரன் சுத்த உபதேசமோ என்று வெகு சந்தேகத்துடனே கவனித்து வந்தார்கள்.

1884 ஷூ புதுவருஷ ஆரம்பம் தஞ்சாவூர் சபைகளுக்கு (S. P. G. and Lutheran) சந்தோஷமாயிருந்ததில்லை. Rev. C. F. Schwartz ஐயருடைய ஆசீர்வாதம் அவர்கள் என்ன செய் தாலும் அவர்களைக் காப்பாற்றிவிடும் என்கிற நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது. அதினால் துணிந்து கர்த்தரைக் கோபப்படுத்த தொடங்கினார்கள். அந்த வருஷம் கர்த்தர் பிறந்த பண்டிகையின் விடுமுறை நாட்களில், சேலத்திலிருந்து வந்திருந்த வக்கீல் தெய்வசகாயம் பிள்ளை (Brother of Retired Munsiff David Pillai of Tanjore) தங்கள் பூர்வீகமான வீட்டில் அம்மன்பேட்டைலிருந்து (வேதியர்புரம் of Christians) தாசி களை அழைப்பித்து, மார்க்கண்டேயர் நாடகத்தை ஆடச் செய்து, வெகு கிறிஸ்தவர்கள் அதை ஆவலாய் வேடிக்கை பார்த்தார்கள். மறுநாளிலே, அந்த வீட்டில் அவருடைய சகோதரியினுடைய குமாரன் தானியேல்பிள்ளை என்ற குணசாலியான வாலிபனுக்கு வாந்திபேதி கண்டு விடியற் காலத்திற்குள் இறந்துபோனான். அவன் லூத்தரன் சபை

யைச் சேர்ந்தவன். என்னை ஒரு கேள்வி கேட்டார்கள். அதற்கு, "Pamperin ஐயர் உத்தரவு சொல்லுவார்," என்றேன். அந்தக்கேள்வி—" பொல்லாதவர்களாகிய எங்களை விட்டு பக்தியுள்ள இந்த வாலிபனை ஆண்டவர் ஏன் அடித்தார் ?" Pamperin ஐயர் அடக்க ஆராதனை நடத்தினார். அந்தக் கேள்விக்கு அவர் உத்தரவு சொன்னார் வருமாறு :—

" எங்கள் சீமையில் பக்தியில்லாத பெற்றோருக்கு பக்தியுள்ள ஒரே மகனிருந்தான். அவனை ஆண்டவர் எடுத்துக் கொண்டார். அந்தப் பெற்றோர் தங்கள் குருவினிடத்தில் கோபமாய் போய் அவரை இதே கேள்வி கேட்டார்கள். எல்லோருக்கும் பிரயோஜனமாக இந்த ஆராதனையின் பொழுது உத்தரவு சொல்லுகிறேன்.

ஒரு இடையனுக்கு பிரியமான ஒரு ஆட்டுமந்தை இருந்தது. அவைகளுக்கு, தித்திப்பான கொழுத்த பளபளப்பான புல் அறுத்து கட்டுகட்டாய் கொண்டுவந்து தொழுவத்தில் போட்டு நல்ல விருந்து ஊட்ட எத்தனித்தான். அந்த மந்தையோ உள்ளே போகவேயில்லை. ஆகவே இதற்கு என்ன யுக்தி என்று யோசித்தான், குட்டிகளை ஒவ்வொன்றாய் பிடித்து உள்ளே கொண்டுபோய் சிறுசிறு கயிறுகளினால் கட்டினான். குட்டிகளெல்லாம் உள்ளே போனபின், பெரிய ஆடுகள் கஷ்டம் கொடுக்காமல் வலிய உள்ளே போயின.

அதுபோலவே, பக்தியில்லாத பெற்றோர், சொந்தக்காரர் முதலியவர்களை, பரலோகமந்தையில் கொண்டுபோய் சேர்க்கிறதற்காக அவர்களுக்கு பிரியமானவர்களை முந்தி அங்கே கொண்டுபோய் சேர்க்கிறார். மேலும் பக்தியுள்ளவர்கள் பரலோகம்போக ஆயத்தமுள்ளவர்கள். அவர்களுக்கு எந்த நேரத்திலும் அழைப்பு வரலாம். அவர்களுக்கு வருகிற

மரணம் அசுப்பான துர்மரணம் அல்ல. இந்த உத்தரவே நானும் உங்களுக்கு சொல்லுகிறேன்" என்று சொல்லி Pamperin ஐயர் பிரசங்கத்தை முடித்தார்.

அப்பொழுது துவங்கின வாந்திபேதி ஏறக்குறைய மார்ச்சு மீ முடிவுவரையில் தஞ்சாவூர் மிசியோன் தெருக்களை பயங்கரமாய்க் கலக்கி அநேகரை வாரிக்கொண்டுபோயிற்று. எனக்கு 1884-ஆம் பெப்ருவரி மீ 3 தேதி குருப்பட்டம் நியமித்திருந்தது. நான் இரவும் பகலும் வாந்திபேதிக்காரர் நடுவில் ஊழியஞ்செய்து குருப்பட்டத்திற்கு இன்னும் 20 நாள் இருக்கும்போது பயங்கர வாந்திபேதியால் பீடிக்கப்பட்டு மரணத்தின் ஓரத்தில் வந்திருந்தேன். அப்போது வெகுபேர் எனக்காக ஜெபம் பண்ணினார்கள் என்பது எனக்கு தெரியும். Pamperin ஐயர் Exshaw No. 1. Brandy கொண்டுவந்து அதனோடு சுடுதண்ணீர் கலந்து என் வாயைத்திறக்கச் சொல்லி ஊற்றினார். அது நெருப்புப்போல் விழுந்தது. ஆண்டவர் அதையே மருந்தாக உபயோகித்து, அநேக மணி நேரம் நல்ல நித்திரையைக் கொடுத்தார். நான் கண்விழித்த போது, வியாதி முற்றும் தீர்ந்திருந்தது. பலவீனமாத்திரம் சொல்லமுடியாமல் அதிகமாயிருந்தது. அந்த நேரத்தில் என் பெண்சாதி பிள்ளைகளை கர்த்தரிடத்தில் நம்பிகையாய் ஒப்புக் கொடுத்திருந்தேன். நான் சுகமானது எல்லோருக்கும் சந்தோஷமாயிற்று.

ஒரு வாரத்திற்குபின் அந்த வியாதியில் அவஸ்தைப் பட்டவர்களை நானே பெலவீனத்தோடு நேரில்போய் விசாரித்து வந்தேன். அந்தகாலத்து வாந்திபேதி எவ்வளவு பயங்கரமாயிருந்ததென்பதை ஒரு அடக்கத்தின்போது பிள்ளையின் பிரேத தொட்டியை தகப்பன் முன்னும் நானும் உபதேசியாரும் மாறிமாறிப் பின்னும் சுமந்துபோக நேரிட்டதினால் அறியலாம்.

அந்த தகப்பன் என்னிடம் வந்து, "பிரேதத்தை எடுக்க முதலாய் சொந்தக்காரர் வரமாட்டேன் என்கிருர்கள்! என்ன செய்வேன்!" என்று அழுதான். "பயப்படாதே! நானும் உபதேசியாரும் உனக்கு உதவி செய்வோம்" என்று அவனுக்கு தைரியஞ் சொல்லி மேற்சொன்னபடி செய்தேன். நான் இந் நாள் வரையும் இருக்கிறது (August 1916) கர்த்தருடைய விசேஷித்த கிருபை.

எனக்கு குறித்த பிப்ருவரிமீ 3உ-ல் குருவபிஷேகம் நடந்தது. அது தஞ்சாவூரில் அல்ல தரங்கம்பாடியில் நடந்தது. ஏனென்ருல், தரங்கை லூத்தரன் மிசியோனின் பரிசுத்த தலைநகரம்.

---

## அத்தியாயம் 7.

---

### சிதம்பரத்திற்கு மாற்றப்பட்டது
### ஹிந்துக்களுக்கு செய்த சுவிசேஷ வேலை.

சிதம்பரத்தில் மிஷனரியாயிருந்த Rev. A. F. Wolf என்பவர் 1884-ஹு நவம்பர்மீ 15-ம் தேதியில் இரவில் மரித்துப் போனர். பிராயம் 50 இருக்கும். அவருடைய மூத்த மகன் இங்கிலாந்தில் Engineering கற்று ரூ. 500 சம்பளத்தில் மத்திய மாகாணத்திற்கு (Central Provinces) மாற்றப்பட்ட செய்தியை தந்தியால் தெரிவித்து, "நாளைக் காலையில் உங்கள் கழுத்தைக் கட்டிக்கொண்டு என் ஆசைதீர உங்களுக்கு ஒரு முத்தம் கொடுப்பேன்" என்று தந்தியில் சொல்லியிருந்தானும். ஏழைப் பரிதிரியார் பிள்ளைமுகம் பார்க்க வெகுநாள் (12 வருஷம்) காத்திருந்தவர், தந்தியைக் கண்டவுடனே வந்தவர்களிடத்திலெல்லாம், "நாளைக்கு என் மகனைப் பார்ப்பேன்" என்று ஓயாமல் சொல்லி சந்தோஷப்பட்டாராம். அந்த நாள்

இரவில் மெத்தைமேல் ஏறிப் படுக்கப்போகையிலும், சமுசாரத்தை 'வரவேண்டாம்' என்று தடுத்து, தான் ஒண்டியாய் தூங்கப்போனாராம். விடியற்காலத்தில், மகன் வந்து 'அப்பா, அப்பா' என்று சந்தோஷமாய்க் கூவிக்கொண்டு மெத்தையில் ஏறினனும். அப்பா பதில் சொல்லாமையால் மகன் ஜன்னலை உடைத்து உள்ளே போய் பார்க்கையில், தகப்பன் கால் நீட்டின படிக்கு, முகத்தில் இன்னும் சந்தோஷம் ஜொலிக்க பிரேதமாய் படுத்திருந்தாராம். அந்தக் காலத்தில் சோனுமாரியாய் விடாமழை பெய்தது. கல்லறைத் தோட்டம் இரண்டு மைலுக்கப்பாலிருந்தது. பிரேதப்பெட்டி செய்யவும் தாமதமானதால், அவசரமாய் மிசியோன் கம்பவுண்டிலேயே அடக்கம் செய்தார்கள்.

---

அவருடைய ஸ்தானத்தில் அந்த ஸ்டேஷனை ஒப்புக்கொள்ள ஒரு ஐரோப்பிய மிஷனரி அகப்படாமையால், தற்காலத்திற்கு ஒரு சுதேச குருவையே மிஷனரியாக அனுப்ப ஆலோசனை சங்கத்தில் தீர்மானித்து என்னை அனுப்பினார்கள். (நவம்பர் 23வ- 1884-ஆம்). நாலரை மாதந்தான் சிதம்பரத்தில் தங்கினேன்.

எனக்கு தமிழ் நூல்களில் அப்பியாசம் செம்மையாய் ஏறியிருந்ததினல், வித்வான்களுள் ஒருவனாக சிதம்பரத்தில் மதிக்கப்பட்டேன். சிதம்பரத்தில் அப்பேர்ப்பட்ட மதிப்பு வருமுன் நான் பாதிரியார் பங்களாவில் ஊருக்கு வெளியே குடியிருந்தபடியாலும், ஏறக்குறைய காதைத்தொடுகிற மீசையிருந்தபடியாலும், ஊரார் நான் தெருவில் போகும்போது, ஒதுங்கிப் போவார்கள். "வெள்ளைக்காரப் பாதிரி செத்த பிறகு பறைப்பாதிரி வந்திருக்கிறான்" என்று பேர் ஆச்சு. அது காதில் விழுந்த மறுநாளே மீசையைச் சிறைத்து, சைவர்கள் ஸ்நானம் பண்ணும் "ஞானப்பிரகாசம்" என்னும் தடாகத்

திற்கு ஸ்நானத்திற்குப் போனேன். ஊற்றுப்பட்டையொன்று வாங்கி அதையும் கையோடு கொண்டுபோனேன். சைவர்களுக்கு முந்தி அதிகாலையில் ஸ்நானம் செய்து, வேஷ்டி துவைத்து, ஊற்றுப்பட்டையில் தொவையல் வேட்டியை வைத்து, சைவர்களுக்கு முந்தி வீட்டுக்குத் திரும்பினேன். பங்களாவிற்கும் குளத்திற்கும் இரண்டு மைல். ஒருமாசம் ஆனபின் பங்களாவில் இருக்கிறவர் சைவ பாதிரியார் என்கிற பேர் ஆயிற்று. தவிர, நான் இரண்டு புள்ளிமான் தோல்களை பதனிட்டு வைத்திருந்தேன். நீர்க்காவி செம்மையாய் ஏறின வேஷ்டியும் உத்தரீகமும் அணிந்து மான்தோல் எடுத்து தெரு வழியே போகும்பொழுது என்னை யாரோ பெரியவரென்று யாவரும் கும்பிட ஆரம்பித்தார்கள். எந்த திண்ணையிலும் வருந்தி உட்காரச் செய்தார்கள். மான்தோல் விரித்து சம்மணமிட்டு உட்கார்ந்து கிறிஸ்துமார்க்க உபதேசத்தை செய்வேன். மனமுள்ளவர்கள் மிக நெருங்கி கேட்பார்கள். நெருங்கி வருபவர்களை, "எனக்கு ஸ்பரிசம் உதவாது; எட்ட இருங்கள்." என்று விலக்கி வைப்பேன். ஊரெங்கும் புதுப்பாதிரி தேர்ந்த சமய வித்வான் என்று பிரஸ்தாபம் ஆயிற்று.

ஆறுமுக நாவலருடைய சைவ வித்தியாசாலைக்குள் போய் மான்தோலை விரித்து உட்கார்ந்தபோது உபாத்திமாரும் மாணாக்கரும் என்னை வந்து சூழ்ந்துகொண்டார்கள். அவர்களை, ஆறுமுக நாவலர் இலக்கணத்தில் சொல்லப்படாத தமிழ் உபசர்க்கங்களைப் பற்றி வினவினேன். சில புத்திசாலியான உபாத்திமார்கள் இரண்டொரு உபசர்க்கங்களைச் சொல்லி சும்மா நின்றார்கள். நான் அவர்களுக்கு, "இது இலக்கண வித்தியாசாலையென்று கீர்த்தி பெற்றதாயிற்றே; உபசர்க்கங்களை சூத்திர ஆதாரத்துடனே சொல்லத் தெரியவில்லையே!" என்றேன். "ஸ்வாமிநாத தேசிகரின் இலக்கணக் கொத்து இங்கே இருக்கிறதா?" என்று கேட்டேன். நாவலர் அச்சடித்த ஒரு

பிரதி இருக்கிறது என்றார்கள். கொண்டுவரச் சொல்லி சூத்திரத்தை காண்பித்தேன். சூத்திரத்தையும் உதாரணத்தை யும் அறிந்தபின், அந்த ஊரில் புதுப்பாதிரியார் இலக்கண வித்வான் என்கிற பேர் எழும்பிற்று.

சிதம்பரத்தில் பெரிய பிரபுவாகிய நாட்டு தேவராய முதலியார் சுமார் 25 பிராயம் உள்ளவர். தமிழ் பேர் இலக்கணங்களை விருத்தியுரையுடன் பரிபூரணமாய்க் கேட்க ஆசைப்பட்டு என்னிடம் வந்து, "நான் தகுந்த சம்பளம் கொடுக்கிறேன். வண்டியும் அனுப்புகிறேன். எனக்கு நாள் ஒன்றுக்கு இரண்டு மணி நேரம் பாடஞ்சொல்லுங்கள்." என்று கேட்டார். "வித்தையை விற்று பிழைக்கக்கூடாது. உமக்கு சும்மா பாடஞ்சொல்வேன். ஆனால் நான் உம்மிடத்தில் வர முடியாது. நான் வைகறை ஸ்நானம் முடித்து, வீட்டிற்குத் திரும்பி போஜனஞ் செய்தபின் காலை $7\frac{1}{2}$-நாழிக்கு நீர் வரலாம்." என்றேன். அப்படியே அவர் வந்து பாடம் கேட்பாரானார். நாலரை மாதத்திற்குள் ஊர் முழுமையிலும் என்னுடைய பேர் நல்ல பிரஸ்தாபம் ஆனது. ஆயினும், சைவசமயிகள் சைவத்தையும் அத்துவைதத்தையும் இணைத்து சைவாத்துவைதம் ஆக்கி உபதேசிக்கிற மாதிரி, நான் கிறிஸ்து சமயத்தையும் அத்துவைதத்தையும் இணைத்து கிறிஸ்துவாத்துவைதம் (Christian pantheism) போதித்தேன். ஆண்டவரை மகிமைப்படுத்தாமல் மனுஷருடைய சாஸ்திரங்களை மகிமைப்படுத்துகிறதா யிருந்தபடியால் சீக்கிரத்திலே எனக்கு ஒரு முடிவு உண்டு பண்ணினார். அது எப்படி யெனில் பின்வரும் சங்கதியில் தெரியும்.

பங்களாவிலே நான் குடியிருந்தபடியினால் District Judge, District Collector, District Police Superintendent, District Surgeon, முதலியவர்கள் ஜமாபந்திக்கு வரும்போது என்னு

டைய பங்களாவில் தங்குவார்கள். பங்களாவை தங்கள் தங்கள் எஜமானுக்கு ஆயத்தஞ்செய்ய District Munsiff, Taluk Magistrate or Thasildar or Sub-Magistrate, Police Inspector, Apothecary இவர்கள் முறையே என்னிடத்தில் பங்களாவில் இடங்கேட்பார்கள். நான் தாராளமாய் இடங்கொடுப்பேன். அவர்கள் தங்கள் எஜமான் தங்குகிற நாளெல்லாம் அவர்களுக்கு வேண்டிய சாமான்களை என் பங்களாவுக்கு அனுப்புவார்கள். அவர்கள் எஜமான்களுக்கு கைகட்டி, பயந்து நின்று பேசும்போது, நான் அந்த எஜமான்களுடன் ஆசனத்தில் உட்கார்ந்து பேசுகிறதுண்டு. அதினால் சிதம்பரத்திலிருக்கிற கவர்மெண்ட் உத்தியோகஸ்தர்கள் எல்லாரும் எனக்கு வெகு மரியாதை செலுத்த ஆரம்பித்தார்கள். வாலிபனுயிருந்த எனக்கு இந்த உலகநடையை கவனித்து ஆச்சரியமுண்டாயிற்று.

என் எஜமானுகிய Rev. J. Kabis என் வட்டத்தை விசாரிக்க வரும்போது, நான் ஊர் அதிகாரிகளுக்கு அதைத் தெரிவிப்பேன். அவர்கள் வண்டிமேல் வண்டியையும் கோழி முட்டை முதலிய சாமான்களும் மரியாதையாய் அனுப்புவார்கள். அதிகாரிகள் என்னை அவ்வளவு மேன்மை படுத்துவது Kabis ஐயருக்கு பொறுக்கவில்லை. அவர் என் மேலானவர்களுக்கு எழுதி என்னை ஐந்தாவது மாதத்தில் பொறையாற்றுக்கு மாற்றிவிட்டார்கள்.

1885-வது மார்ச்சுமீ முடிவிற்குள் பொறையாற்றிலிருக்க வேண்டுமென்று எனக்கு மேலாவிலிருந்து உத்தரவு வந்தது. அது என் இலக்கண மாணுக்கனுகிய தேவராய முதலியாருக்கு தெரியவந்தவுடன் அவர் ஊரில் பெரிய மனுஷருடைய மாஜர் வாங்கி தானே தலைக்கையெழுத்து போட்டு என்னை மாற்றக்கூடாதென்று விண்ணப்பம் பண்ணி கிறிஸ்து

மார்க்க உபதேசத்திற்கு தன் பண்ணையாட்கள் ஐயாயிரம் பேரை கொடுக்க தயாராயிருப்பதாகத் தெரிவித்தார். ஆலோசனை சங்கத்தார் என்னை பொறையாற்றுக்கு மாற்றின தீர்ப்பை மாற்றுதிருந்தார்கள். நான் மனங்கூடாமலே பொறையாற்றுக்குப் போனேன்.

---

## அத்தியாயம் 8.

---

### ரங்கூன் சபைக்கு பாதிரியாகப் போனது.

1885-ஆம் டிசம்பர் மாதத்தில் சுதேச குருக்களுக்கு ஒரு கேள்வி வந்தது. அது என்னவென்றால், இரங்கூனில் ஐரோப்பிய மிஷனரிக்கு மாதச் சம்பளம் ரூ. 500-ம் வீட்டு வாடகை ரூ. 120-ம் கொடுக்கிறது மிசியோனுக்கு நஷ்டம் ஆகிறபடியால், ஒரு சுதேச குருவை வைக்க மிசியோனுக்கு யோசனையிருக்கிறது. யார் போக விரும்புகிறீர்கள்?" என்றார்கள். ஒருவரும் "நான்" என்று முன்னுக்கு வரவில்லை. ஞா. சாமுவேல் ஐயரை கேட்டதற்கு, "நான் பெரிய குடும்பி; போக முடியாது." என்று சொல்லிவிட்டார். சென்னப்பட்டணத்திலிருந்த தாவீது ஐயரை கேட்டதற்கு, அவர்போக பயந்தார்.

1885-ம் வருஷத்தில் சென்னை பட்டாளத்தைக்கொண்டு Upper Burma-ஐ General Prendergast பிடித்து Mandalay-இல் இங்கிலீஷ் கொடியை நாட்டி Theba ராஜனை பம்பாய் ராஜதானியைச் சேர்ந்த ரத்தினகிரியில் சிறைபிடித்து வைத்திருந்தார்கள். அதனால், "பர்மர்கள் மூர்க்கவெறிகொண்டு சென்னை ராஜதானியை சேர்ந்தவர்களை தங்கள் தேசத்தில் எங்கே கண்டாலும் கொல்லுகிறார்கள்" என்கிற பேச்சு

கிளம்பியிருந்தது. எல்லாரும் போக பயந்தார்கள். நான் போக ஒப்புக்கொண்டு 1886-ம் வருஷம் மார்ச்சு-மீ 10௳ சென்னைத் துறைமுகத்தில் கப்பல் ஏறினேன். நான் ஏறின கப்பலுக்கு 'ஆசியா' என்று பேர். என்னுடைய பெண்சாதியும் பிள்ளைகளும் படிப்பினிமித்தம் பொறையாற்றிலேயே நின்று விட்டார்கள். அந்தக்காலத்தில், ரங்கூன் கப்பல்கள் நேரே போகாமல், விசாகப்பட்டணம், பந்தர், காளிங்கப்பட்டணம் முதலிய அநேக துறைமுகங்களைப் பிடித்து, கடைசியாக கோபால்பூர் துறைமுகத்திலிருந்து நேரே ரங்கூனுக்குப் போகும். அதினால் ரங்கூன் பிரயாணம் அக்காலத்தில் 10 நாள் பிரயாணம். பிரயாணத்தில் அநேக நாட்கள் நிற்கத்தக்க பலகாரங்களை நெய்யில்செய்து என் பெண்ஜாதி பெரிய மூட்டையாய் கொடுத்திருந்தாள். கப்பலில் நெய் பலகாரம் உதவே உதவாது என்று எனக்குத் தெரியாது. பசி பயங்காரமாயிருந்தது. பலகாரத்தில் வயிறுகொண்ட மட்டும் சாப்பிட்டேன். ஒரு மணி நேரத்திற்கு பின் உமட்டல் உண்டாகி எல்லாவற்றையும் வாந்தி யெடுத்தேன். மயக்கமும் களையும் உண்டாயிற்று. கப்பல் மாலுமியை வரச்சொல்லி சங்கதியை தெரிவித்தேன். "உனக்கு சாப்பாட்டுடனே யாத்திரைச்சீட்டு இருக்க, நீ ஆபீசரோடு உட்கார்ந்து சாப்பிட்டிருக்கலாமே சாப்பிடாமல் ஏன் சும்மாயிருந்தாய்? கப்பலில் பசியாய் இருக்கலாகாது; இப்பொழுது உடனே சாப்பாடு அனுப்புவேன். பிறகு சாப்பாடு அட்டவணையும் (Menu) வேளையும் தெரிவிப்பேன்; ஆபீசருடன் சாப்பிடு." என்று சொல்லி போய்விட்டான்.

5 நிமிஷத்திற்குள் ஒரு பீங்கான் நிறைய கறித்துவட்டல் போட்டு சாதம் ஆவி பரிந்துகொண்டு வந்தது. கத்தி, முள் எல்லாம் வந்தது. என்னுடைய பீங்கான் தவிர வேறுருவர் பீங்கானிலும் சாப்பிட்டறியேன். நான் அந்தக்காலத்தில் சாதியில் மிகவும் வைராக்கியனாயிருந்தேன். "இது யார்

தின்ற கோப்பையோ!" என்று வெறுப்பாயிருந்தது. சாதம் கொண்டுவந்த துலுக்கப்பையன், "கானு ஜல்தி காவ் சாப்" என்று முடுக்கினான். அதற்கு அர்த்தம் தெரியாமல், கிட்ட இருந்தவரை "என்ன சொல்லுகிறான்?" என்று கேட்டேன். "சுறுக்காய் சாப்பிட சொல்லுகிறான்" என்றார்கள். பசி ஆளையே எடுத்து சாப்பிடலாமென்றிருந்தது. கத்தியும் முள்ளும் தூரவைத்து கண்ணை மூடிக்கொண்டு சாதத்தையும் கறியையும் வாயில் அள்ளி அள்ளி வைத்தேன். நன்றாயிருந்தது. துலுக்கப்பையன் "அச்சா, அச்சா" என்று சிரித்தான். கண்ணைத் திறந்தவுடன் கோப்பையில் இருந்த சாப்பாடு அவ்வளவும் வயிற்றுக்குள் போயிருந்தது. அவன், "துஸ்ரா ஏக் பிளேட்" என்றான். அர்த்தம் விசாரித்தபோது "மறுபடியும் ஒரு பிளேட் சாதம் வேணுமா? என்கிறான்" என்று அடுத்தவர் சொன்னார். அவருக்கு, "வேண்டும் என்று சொல்லுங்கள்" என்றேன். அவர் "துஸ்ரா ஏக் ப்ளேட் ஜல்தி லாவ்" என்றார். அவன் ஓட்டம் பிடித்தான். ஐந்து நிமிஷத்திற்குள்ளாக பழையபடி ப்ளேட் (plate) நிறைய சாப்பாடும் கறியும் போட்டுக்கொண்டு வந்தான். அதையும் முழுவதும் சாப்பிட்டு, பசியாறி நித்திரை செய்தேன் விழித்தவுடன், மறுபடியும் பசி எடுத்தது அந்நேரத்தில் சாப்பாட்டு அட்டவணையுடன் ஆள் வந்தான். கூடப்போன பொழுது, ஆபீஸர்கள் அறையில் சாப்பாடு இருந்தது. அத்தனை வெள்ளைக்காரர் நடுவில் நான் ஒருவனே கருப்பன். "கரண்டி கத்தி முள்ளால் சாப்பிடுகிற வழக்கம் எனக்கு இல்லை" யென்று பக்கத்திலிருந்த ஆபீசருக்கு சொன்னேன். அவன் கப்பலின் முதல் ஆபீசர்; Irish-காரன்; கையில் "Galloway" என்று பச்சை குத்தியிருந்தான். "May I know if this is your name," என்று கேட்டேன். "Yes, exactly" என்றான். பிறகு, "I will teach you to use your fork and knife. It will be very ugly if you use your fingers. These men

won't like it" என்று பட்சமாய் சொன்னான். அப்படியே கத்தி முள்ளு இவற்றை இப்படி வைக்கவேண்டும் குத்த வேண்டும் என்று கற்றுக்கொடுத்தான். இரண்டே வேளையில் அவர்களைப்போல் சாப்பிட கற்றுக்கொண்டேன்.

ஜாதி வித்தியாசம் பார்க்கிறதில் மிகவும் அகோர கடின மாயிருந்த நான் யாருடைய கோப்பையிலோ வேளைக்கு வேளை சாப்பிட்டேன்; சமையலும் பறையர்களும், துலுக்கர்களும் செய்த சமையலாயிருந்தது; இது எனக்கே ஆச்சரியமாயிருந் தது. இதனால் தேவனே எனக்கு ஒரு பாடம் கற்றுக்கொடுத்த தாக நினைத்தேன். இரண்டு நாளாய் அதுவே சிந்தையாயிருந் தேன். கடைசியில் வெளிச்சமாய் எனக்கு உதித்தது என்ன வென்றால், ஜாதி வேற்றுமையை விடாப்பிடியாய் சாதித்த லுத்தரன் சபை அது விஷயத்தில் தேவனுக்கு விரோதமாக பாவம் செய்கிறதென்றும், எல்லா ஜாதிகளையும் கிறிஸ்துவுக் குள் சிலுவை வல்லமையால் ஒன்றாகச் சேர்க்க வந்த கிறிஸ்து வின் ஆவிக்கு அது முழு விரோதமென்றும், தமிழ் நாட்டு லுத்தரன் சபையில் சாதி வித்தியாசத்தை நீக்குகிறதற்கு ஆண்டவர் என்னை பணிமுட்டாய் தெரிந்துகொண்டார் என்றும் அழியா எழுத்தாய் என் மனதில் பதிந்தது. இதுதான் என் ஆயுசு காலத்தில் செய்த முக்கிய வேலை யென்று இப்போது நினைக்கிறேன். ஜாதியில் தாழ்ந்த ஆதிதிராவிட கல்வியிலும் நாகரீகத்திலும் வளர்க்கிறது தமிழ்ச்சபையின் முக்கிய கடமை யென்று வற்புறுத்தியிருக்கிறேன். ஆசியாக்கப்பலில் ஆண்ட வர் எனக்கு கற்றுக்கொடுத்த முக்கியமான பாடம் இதுதான்.

கோபால்பூர் துறை வந்தபோது கப்பலில் உள்தட்டில் வியாபாரிகளின் பெட்டிகளோடு என்னுடைய உடுப்பு புஸ்தகம் எல்லாம் இருந்த பெட்டியையும் வைத்திருந்தார்கள் என்பது எனக்கு தெரியாது. கோபால்பூரில் வியாபாரிகளுடைய பெட்டி

களை இறக்கினபோது, என்னுடைய பெட்டியையும் படகில் இறக்கிவிட்டார்கள். 5 நிமிஷத்திற்குள் படகு புறப்படயிருந்தது. நான் Galloway என்கிற ஆபீசரோடு பேசிக்கொண்டு தற்செயலாய் கப்பலோரத்திலிருந்தேன். ஆண்டவர் என் கண்ணை என் பெட்டியிருந்த படகுக்கு நேராய் திருப்பினர். உடனே Galloway-யினிடம், "அது என் பெட்டி; அது மேலே வரவேண்டும்." என்றேன் "கோபால்பூர் வியாபாரி தன் பெட்டிகளை எண்ணி இறக்கிக்கொண்டான். உன் பெட்டி எப்படி படகுக்கு வரும்?" என்றான். "அது எப்படி வந்தாலும் சரி, என்பெட்டி மேலே வரவேண்டும். இல்லாவிட்டால், உன்னையும் கப்பல் மாலுமியையும் நஷ்டத்துக்கு உத்தரவாதமாக்குவேன்." என்று கடுகடுத்து சொல்லிவிட்டேன். "அது உன் பெட்டியாயிராவிட்டால், அப்போது என்ன செய்வாய்?" என்றான். "நீயும் மாலுமியும் கேட்கிற அபராதம் கொடுப்பேன்." என்று உத்தரம் சொன்னேன். அவன் உடனே என்பெட்டியை மேலே தூக்கி பெரிய எழுத்தால் என்பேர் எழுதியிருக்கக்கண்டு வியாபாரியை கடுமையாய் கோபித்து என் பெட்டியை பத்திரமான இடத்தில் வைத்தான். அதினால் நான் பெரிய நஷ்டத்திற்குத் தப்பினேன்.

மூன்றுநாள் பிறகு ரங்கூன்துறை பிடித்தோம். அங்கு என்னை ஏற்றுக்கொள்ள வந்த ரங்கூன் முகாமைக்காரர்கள் என்னை முகம் தண்டி அறியாதவர்கள். பிரயாணிகளெல்லாரும் அவரவர்கள் பெட்டிகளுடன் போனபிற்பாடு, நான் தனித்து கப்பலைக் கட்டும் மேடை (Warf) மேல் நின்றேன். முகாமைக்காரர் ஒருவருக்கொருவர் "நமக்கு நாட்டையர் வரவில்லை போல் தோன்றுகிறது. இங்கே நிற்கிற பிராமணனைக் கேட்போம்" என்று பேசிக்கொண்டு, என்னிடம் வந்து, "உங்களுடைய பெயர் என்ன?" என்று கேட்டார்கள். நான் சொன்னேன். உடனே தோத்திரம் பண்ணி உங்களுக்காகத்

தானே வண்டி கொண்டு வந்து காத்திருக்கிறோம் என்றார்கள். நான் என் சாமான்களை அவர்களிடம் ஒப்புவித்தேன். அவர்களில் ஒருவர், "எங்கள் வீட்டில் உங்களுக்கு சாப்பாடு செய்திருக்கிறோம். மாம்சம் சாப்பிடுவீர்களா?" என்றார். நான் "எந்த மாம்சமும் சாப்பிடுவேன். நான் பிராமணனல்ல." என்றேன். அவர் ரங்கூனில் முக்கிய முகாமைக்காரனாகிய A. G. சாமிப்பிள்ளையின் சகோதரனாகிய ராஜாப்பிள்ளை யென்பவர்; "நான் எல்லா மாம்சமும் சாப்பிடுவேன்" என்றவுடன் கலகலவென்று நகைத்தார். சாமிப்பிள்ளை தன் வீட்டில் என்னைப் பிரியமாய் ஏற்றுக்கொண்டார். அவர் வீட்டில் இரண்டு மாசம் இருந்தேன். Mayer ஐயர் என்னை இந்தியாவில் அறியாதவர். அவர் Germany-ல் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவர். முதலில் இறுமாப்பாயிருந்தும், இரண்டு மாதத்திற்குள் என்னுடன் நெருங்கின நேசன் ஆகவும் என்னை ஒரு வெள்ளைக்காரனைப்போல் மரியாதை செய்யவும் கற்றுக்கொண்டார். பிறகு அவர் முழுச் சார்ஜையும் என்னிடத்தில் ஒப்புவித்தார். தவிர, என்னை ரங்கூனிலிருந்த பெரிய சீமை மிலிட்டேரி உத்தியோகஸ்தர்களுக்கு பழக்கம் பண்ணி வைத்தார். அவர்களுக்கு, "நான் ஐரோப்பியருடன் சம மரியாதைக்கு யோக்கியன்." என்று சொல்லி, பிறகு என்னுடனே, "உன்னை வெள்ளைக்காரர் விருந்துக்கு கூப்பிடுவார்கள்; தட்டுதல் செய்யாமல் போ. போகாவிட்டால், நீ அவர்களை சாப்பாட்டுக்கு அழைக்கவேண்டும். அது உன்னால் கூடாது." என்று சொல்லி அநேக துரைமார்களிடம் என்னை முகப்பரீக்ஷை பண்ணிவைத்தார். மேலும், இன்சீன் (Insein)-இல் இருந்த Mrs. Bennet என்கிற கிழவிக்கு என்னை ஒப்புவித்து, "இவரை பிள்ளைபோல் பார்த்துக்கொள்; தவிர, வெள்ளைக்காரருடைய மரியாதையை (etiquette) கற்றுக்கொடு." என்று சொல்லி அந்த அம்மாளிடம் எனக்கு விசேஷ பழக்கம் செய்வித்தார். இன்சீனுக்கும் ரங்கூனுக்கும் இரண்டு மைல் ரெயில்

போகும். ஆனால் நான் அந்த அம்மாளிடம் அடிக்கடிபோய் அவர்களுடைய தாயடைவான அன்பை பெற்றுக்கொண்டேன். அவர்களுக்கு வயசு 90 இருக்கும். அமெரிக்கன் காங்கிரிகேஷன் (Congregation) சபையைச் சேர்ந்தவர்கள். அவர்களை பரா மரிக்க அவர்களுடைய 70 வயசுள்ள மகள் வந்திருந்தார்கள். இருவரும் எனக்கு நிரம்ப பட்சம் காண்பித்தார்கள்.

அந்தக் காலத்தில் மிஷன் வரும்படி குறைவாயிருந்ததால் தரங்கை தலை ஸ்தலத்திலிருந்து (head-quarters) பணம் பெறு மலே ரங்கூன் சபையையும் பள்ளிக்கூடத்தையும் நடத்தினால் அது மிஷனுக்கு பெரிய உபகாரமாயிருக்குமென லுத்தரன் தரங்கை ஆலோசனை சங்கத்தார் சொன்னார்கள். அது கூடியது தானென்று என்மனதில் பட்டது. எப்படியெனில், மேயர் ஐயர் மிசியோன் செலவில் ஸ்காட்லாந்து கோவிலுக்கு (Scotch kirk) ½ பர்லாங்கு அப்பால் 106 சிறு சிறு பலகை வீடுகளைக்கட்டி அவைகளிலிருந்து ஏறக்குறைய மாதம் ரூ. 150 வசூல் பண்ணிக்கொண்டிருந்தார். அந்த வீடுகளில் மாதம் மாதம் கடிந்து சரியாய் வாடகை வாங்காவிட்டால், குடியிருந்தவர்கள் 3, 4 மாத வாடகையுடன் தெரியாத இடத் திற்கு குடி போவார்கள். ஆகையால் அந்த வரும்படி வெகு விசை நஷ்டம் வரும். தவிர, வாடகை வசூல் செய்த அந்தோணிமுத்து என்னும் உபாத்தி வெகு பணங்களை வாயில் போட்டுக்கொண்டு வாடகைக்காரரைத் துரத்திவிட்டு பாதிரி யாரை ஏமாற்றிக் கொண்டிருந்தான். வாடகைகளை நானே வசூல் செய்யும்படி சாமிபிள்ளை வீட்டை விட்டு அந்த மிஷன் வார்குச்சுள் ஒன்றில் குடிபுகுந்தேன்.

மேற்படி 106 வீடுகளில் 5, 6, தவிர மற்றதெல்லாம் குடிகள் உள்ளதாகவேயிருந்தன. மோசக்காரனான அந் தோணி மாதம் ரூ. 50, 60 மாத்திரம் காட்டுவான். நான்

ஆலோசனைபண்ணி அதற்கு பங்களா தர்வான் (கணக்கப் பிள்ளை) ஒருவனை மாதம் ரூ. 20-க்கு ஏற்படுத்தினேன். அதினால் அவன் சம்பளம்போக மாதம் சராசரி ரூ. 100 வாடகை கிடைத்தது. மேலும் பள்ளிக்கூடத்தில் (Lower Secondary) 6 உபாத்திமார்கள் சுமார் ரூ. 175 மாதம் வாங்கினார்கள். தலைமை உபாத்தியாயருக்கு (Head Master) ரூ. 75 சம்பளம். மாணுக்கர்களுடைய சம்பளமும் கவர்மெண்டார் உதவி சாதனமும் (Grant) சேர்த்து மாதம் ரூ. 100 வரும். கிடைக்கிற வரும்படிக்குள் வேலையை நடத்துவதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்து, நான் என்னை ரூ. 70 சம்பளத்திற்கு தலைமை உபாத்தியாயர் ஆக்கிக்கொண்டு குருவேலையை இனமாகப்பார்த்தேன். இப்படி 14 மாதம் செய்தேன். Sudder Bazaar என்ற பாகத்தில் மாசம் ரூ. 400, 500-க்கு குறையாமல் சம்பளம் வாங்கிக்கொண்டு வாசஞ்செய்த முதலிமார், பிள்ளைமார்களுக்கு வாரத்தில் இரண்டு தரம் நான் தமிழ் பாடம் சொன்னேன். அவர்கள் அதில் மிகவும் பிரியப்பட்டு எனக்கு சம்பளம் கொடுக்கவேண்டும் என்று ஒரு கூட்டம் வைத்தார்கள். அவர்களுக்கு, "நான் வித்தையை விற்று பிழைக்கிறவனல்ல, சும்மா கொடுக்கிறதே எனக்குப் பிரியம்" என்று பிடிவாதமாய் மறுத்துவிட்டேன். நான் வார்க்குச்சில் குடியிருந்தபோது, ரங்கூன் லுத்தரன் சபையில் பொல்லாதவரும் மூடருமாயிருந்த எல்லோரும் அந்த வார்க்குச்சுகளில் குடியிருந்ததைப்பார்த்து, வினைதீர்த்தான் மாணிக்கம் என்ற ஒரு பஞ்சம கிறிஸ்தவனுடைய வீட்டின் விசாலமான முகப்பில் நாள்தோறும் இரவு 8 மணி வரையில் "ஞான உபதேசக் கூட்டம்" ஒன்று வைத்தேன். அதில் பல பேர் ஞான அறிவை அடைந்து சீர்பட்டார்களென்று நினைக்கிறேன்.

நான் ரங்கூனில் இருந்த 14 மாதமும் வாரத்தில் ஒரு முறை தவறாமல் துரைமாரால் சாப்பாட்டுக்கு அழைக்கப்

பட்டேன். என் தமிழ் உடுப்பிலேயே நிலைத்திருந்தேன். அது அந்த துரைகளுக்கு இஷ்டமாகவே இருந்தது. அப்பொழுது நான் குடுமி வைத்திருந்தேன். அதுவும் அவர்களுக்கு இடறலாயிருந்ததில்லை. அவர்கள் சாப்பாட்டு வேளை புஸ்தகமில்லாமல் அநேக காரியங்களைக் கற்றுக்கொள்ளும் கல்விச்சாலையாயிருந்தது. சிலவேளை சாயந்தரம் $7\frac{1}{2}$ முதல் 10 மணி வரையில் சாப்பாட்டில் உட்காருவார்கள். அந்த சாப்பாடு தான் வெள்ளைக்காரருக்கு முக்கியமான சாப்பாடு. அதிலே சில விசை இருபது முப்பது வகை சாப்பாடு வரும். ஷெரி (Sherry,) போர்ட்டு (Port) முதலிய திராட்ச ரசங்களும் வரும். இஷ்டமில்லாததை வேண்டாமென்று சொல்லலாம். ஆனால் திராட்சரசத்தை மாத்திரம் தள்ளக்கூடாது. நான் என்ன செய்தேனென்றால் உதட்டை மாத்திரம் நனைக்கிற நாலு, ஐந்து துளிகளை எடுத்துக்கொண்டு மீதியை அப்படியே வைத்து விடுவேன். அதுதான் மரியாதையாம். வேண்டாத சாப்பாட்டைப்போல் திராட்சரசத்தை தள்ளினால் கூடப்பந்தியிருக்கிறவர்களை குடிகாரரென்று அவமதித்ததுபோல் நினைக்கிறார்கள்.

அநேகம் துரைமார்கள் எனக்கு பழக்கமாயிருந்ததினால் செல்வாக்கும் எனக்கு ஜாஸ்தியாயிற்று. அந்தக் காலத்தில் இந்தியாவிலிருந்து வந்த வாலிபருக்கெல்லாம் உடனுக்குடனே வேலை வாங்கிக் கொடுத்தேன். எனக்கும் பெரிய ஆஸ்திக்காரனாகக்கூடிய ஒரு பிசாசின் சோதனை வந்தது. ஓர் ஜெர்மானிய யூத வியாபாரி தன்னுடைய ஒயின் (Wine) விற்பனை சாலையில் எனக்கு ஒரு பங்கு (Partnership) கொடுத்து வியாபாரத்தை நடத்த என்னை ஏவினார். அந்த சோதனையை, "அவர்கள் தேசத்தில் நீ ஒன்றையும் சுதந்தரிக்க வேண்டாம். உன் தேவனாகிய நானே உன் சுதந்தரமும் பங்குமாயும் இருக்கிறேன்." என்று நான் குரு வேலையில் புகுந்த துவக்கத்தில்

தேவன் Bogatzky's Golden Treasury என்ற புஸ்தகத்தில் மார்ச்சுமீ 20உ வாக்கியத்தினுல் என்னை எச்சரித்த தேவனுடைய வார்த்தையினுல் மேற்கொண்டேன்.

பன்னிரண்டு மாதங்களானபின், தரங்கை ஆலோசனை சங்கத்தார், "உன் பெண்சாதி பிள்ளைகளை அனுப்பி விடுகிறோம். தயவு செய்து நீயே அங்கு இரு" என்று கேட்டார்கள். நான் பணம் சம்பாதிக்க ஆசை வைத்திருந்தால் சந்தோஷமா யிருந்திருப்பேன். ஆனுல் என் பிள்ளைகளின் படிப்பு கெடாமல் ஒரு வருஷத்திற்கு மாத்திரமே நான் ரங்கூன் சபையை ஒப்புக்கொண்டபடியால், "இன்னும் இரண்டு மாதத்திற்குள் இங்கே பதில் ஆள் வராவிட்டால் நான் சபையை முகாமைச் சங்கத்திற்குக் கொடுத்து கப்பல் ஏறுவேன்" என்று எழுதினேன். அவர்கள் தந்தி கொடுத்து, "நீ குறித்த கெடுவுக்குள் ஆள் அனுப்புகிறோம். அம்மட்டும் பதறுமல் இரு" என்று கேட்டுக்கொண்டார்கள். அப்படியே செய்தேன்.

---

## அத்தியாயம் 9.

---

### ரங்கூனில் பர்மிய திருடர்களினின்று உயிர்தப்பினது. சென்னைப்பட்டணத்திற்கு திரும்பினது.

நான் ரங்கூனில் இருந்த 1886-ஆம் பர்மிய கொலைகாரர் தமிழரை அகப்பட்ட இடத்தில் வெட்டுகிற காலம். ஏனென்றுல் முன் கூறிய பிரகாரம், General Prendergast சென்னைப்பட்டணஞ் சேனையைக் கொண்டு வட பர்மாவை படையெடுத்து ஒரு சண்டையுமில்லாமல் தீபா ராஜனை சிறைபிடித்ததினுல், ஆங்கிலேயருக்கு உதவியாய் வந்த சென்னப்

பட்டணத்தார்மேல் வடபர்மியருக்கு வெகு கோபமுண்டா யிருந்து. வடபர்மியர் "ட" என்ற நுனி வளைந்த கத்தி யினால் இடப்பிசகாய் அகப்பட்டுக்கொண்ட தமிழர் மேல் விழுந்து, அவர்களைத் தப்பாமல் துண்டு துண்டாய் வெட்டு வார்கள் அப்படி நான் குடியிருந்த வீட்டிற்கு ஒரு பர் லாங்குக்கு அப்பால் சில வண்ணார்களை வெட்டி ஓடிப்போனார் கள். அவர்களுடைய துடித்துக்கொண்டிருந்த உடல்களை கண்ணால் பார்த்தேன்.

ரங்கூனில் மேமீ முதல் அக்டோபர் வரையில் இரவும் பகலும் ஓயா மழை பெய்யும். அந்த மழையில் எவ்வளவு நனைந்தாலும் ஒரு கெடுதியும் செய்யாது. அக்டோபர் முதல் மார்ச்சு வரையில் பகல் 12 மணி வரையும் நிற்கிற மூடுபனி பெய்யும். மழைகாலம் பர்மிய திருடருக்கு கொண்டாட்ட மான காலம். அவர்கள் மூன்று பேருக்குக் குறையாமல் வருவார்கள். ஒவ்வொருவன் கையிலும் "ட" இருக்கும். சுவர் பலகையை கழற்றி உள்ளே வந்துவிடுவார்கள். ஒரு வன் உருவின கத்தியுடன் தூங்குகிறவர்களின் தலைமாட்டில் நிற்பான். மற்றொருவன் விளக்கு கொளுத்தி வேண்டிய மட் டும் கொள்ளையிடுவார்கள். வீட்டிலிருக்கிறவர்கள் விழித்துக் கொண்டாலும் சத்தங் காட்டாமல் சும்மா இருப்பார்கள். சத்தங் காட்டினால் அவரவர் "ட" வை எடுத்து எல்லாரையும் வெட் டிப் போடுவார்கள். சத்தங் கேட்டாலும் பக்கத்தார் வரவே மாட்டார்கள். எதிர் சத்தமுங் கொடார்கள்.

ஒரு நாள் என் Sudder Bazaar சிநேகிதர்களில் ஒருவ ராகிய செங்கல்வராய முதலியார் எனக்கு "ட" வும் ஈட்டியும் கொண்டுவந்தார். அவர், "வருகிறது மழைகாலம். நீங்கள் ஒண்டியாய் தூங்குகிறீர்கள். இந்த இரண்டும் உங்களை உயிர் காக்கும்" என்றார். அவர் சொன்னபடியே நவம்பர்மீ மத்தி

யில் நடந்தது. இரவில் பெரு மழை பெய்துகொண்டிருந்தது. டர்வான் தண்டின பணத்தை இரவு $10\frac{1}{2}$ மணிக்கு என் கையில் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். ஏறக்குறைய ரூ. 30 என் தலைமாட்டிலிருந்தது. மறுநாள் பகல் 10 மணிக்குத்தான் டர்வான் அதை கஜானாவில் கட்டுவான். எப்படியோ பணம் இருக்கிறதை பர்மிய திருடர்கள் அறிந்து, இரவு 1 மணிக்கு நான் நன்றாய் தூங்குகிற வேளையில் சுவர் பலகையை அறுத்தார்கள். நான் அறுக்கிற சத்தங்கேட்டு விழித்துக்கொண்டாலும், ரங்கூனில் பட்டாளமாய் திரிகிற பெரிய பெரிய பெருச்சாளிகளில் ஏதோ ஒன்று சுவர் பலகையை கறும்புகிறதென்று நினைத்து விளக்கு கொளுத்தாமல் படுத்திருந்தேன். திருடர்கள், 'படார்' என்று ஒரு பலகையை முறித்தபோது விளக்கைக் கொளுத்திப் பார்த்தேன். நாலு திருடர்கள் ஆளுக்கு ஒரு கத்தி வைத்துக்கொண்டு, என்னை உருட்டிப் பார்த்து, கைக்கத்தியை அசைத்தார்கள். நான் ஒன்றும் பேசாமல், என் பக்கத்திலேயே போட்டிருந்த ஈட்டியை ஒரு கையிலும் "ட" வை மறு கையிலும் வைத்துக்கொண்டு, நாற்காலியில் உட்கார்ந்து அவர்கள் இன்னொரு பலகையை அறுப்பார்களா வென்று பார்த்தேன். மற்றொரு பலகையை பெயர்த்தாலன்றி, அவர்கள் உள்ளே வர முடியாது. அவர்கள் விடியற்காலம் 4 மணி வரையில், பர்மா பாஷையில் ஒருவரோடு ஒருவர் என்ன என்னமோ சொல்லி பேசிக்கொண்டிருந்தாலும், ஒருவனும் துணிந்து மறுபலகை அறுக்க நெருங்கவில்லை. நாலு மணி ஆனதும் இரண்டு பேர் படியை விட்டு இறங்கி ஓடினார்கள். அவர்கள் ஒருவேளை ஈட்டி எடுக்க போனார்களென்று நினைத்து, இருக்கிற இரண்டு பேரையும் பயமுறுத்த ஒரு சத்தம் போட்டு அவர்களை குத்துகிறவன்போல் ஈட்டியை ஓங்கி கிட்டப் போனேன். அவர்கள் அலறிக்கொண்டு ஓடிப் போனார்கள். போனவர்கள் கூட்டமாய் வந்தால் என்ன செய்கிறதென்று யோசித்தேன். அவர்கள் ஈட்டி கொண்டு வந்தா

லும் அதை உபயோகிக்க கை விலாசம் வெளியே இருந்த தில்லை. ஆகையால் எத்தனைபேர் வந்தாலும் ஈட்டியும் "ட" வுமே போதுமென்று துணிந்தேன். விடியுமட்டும் வேத புஸ்தகத்தை படித்தேன். பொழுது விடிந்தது தெரியவில்லை.

பக்கத்து அறையில் குடியிருந்த Mr. Jacobs என்ற Eurasian வந்து, "Good Morning Pastor! I see you had an encounter with thieves. I heard also your military noise; but I dare not get out." என்றான். நான், "Never mind Mr. Jacobs. The Lord anticipated this danger and provided me with two good weapons." என்றேன். அவன், "I see you are a bold chap." என்று சொல்லி போய்விட்டான். பிறகு கதவைத் திறந்து பார்த்தபோது அடுத்த பலகையில் கொஞ்சம் அறுபட்டிருந்தது. அதை நாலுபேர் தலை மறைவாய் இருந்துகொண்டு பெயர்த்து உடைக்கலாம். அந்த நினைவு திருடருக்கு வராமல் ஆண்டவர் காப்பாற்றினார். அல்லாவிட்டால் அவர்கள் தலை நீட்டியிருந்தால் ஒருவர் தவறாமல் வெட்டியிருப்பேன். ஆண்டவர் இந்த இரத்தப் பழிக்கு என்னைக் காப்பாற்றினார். அன்றைக்கு தச்சனை வரவழைத்து வெளியே இரட்டைப் பலகையும் உள்ளே இரும்புப் பட்டையும் போட்டு அறையை பலப்படுத்திக் கொண்டேன். மறுநாள் என் உபாத்தியாயர்களில் ஒருவனாகிய சாந்தப்பன் என்ற ஒரு ஆதிதிராவிடன் என்னுடன் தூங்க வந்தான்.

எனக்கு பணம் வைத்துக்கொண்டு இன்னொரு ஆளோடு தூங்கப்பிரியமில்லை. ஆகிலும் அவன் என்னை மிகவும் வேண்டினதின் பேரில் அவன் கேட்டுக் கொள்ளுதலுக்கு சம்மதித்தேன். ஒரு வாரம் என்னோடு தூங்கினான். அவன் பர்மருடைய "கைலி" கட்டிக்கொண்டு தூங்கினான். பர்மருடைய மேல் சட்டையும் போட்டிருந்தான். அவன் ஒன்றுக்கு இருக்க

இரவில் வழி தெரியாமல் கக்கூசுக்கு போகிற கதவை விட்டு தெருக்கதவை படாரென்று திறந்தான். நான் உடனே விளக்கு கொளுத்தி பார்த்தவுடன், பர்மன் உள்ளே வந்திருக்கிறானென்று நினைத்து, "You rascal! You see what I can do!" என்று "ட" வை ஓங்கிக்கொண்டு போனேன். அவன், "ஐயரே! நான் சாந்தப்பன்." என்று கூவினன். "ட" வை கீழே போட்டு, "இந்தக் கதவை ஏன் திறந்தாய்?" என்றேன். "இருட்டில் வழி தெரியவில்லை" என்றான். அவனை, "நாளை முதல் இங்கே வராதே" என்று சொல்லி எச்சரித்து அனுப்பி விட்டேன். அவன் இந்நாள் வரையில் அதை ஓர் ஆச்சரியமான உயிர் தப்புதல் என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். ஆண்டவர் என்னை அற்புதமாய் பழிக்கு விலக்கினர் என்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்.

1887-ம் வருஷம் ஏப்ரல் மீ 1-ம் தேதி, தேவாசீர்வாதம் நாட்டையர் குடும்பத்துடன் வந்து சேர்ந்தார். அவரும் நானும் அநேக வருஷங்களாய் நெருங்கின சிநேகிதர்கள். அவர் வந்தது எனக்கு மிகுந்த சந்தோஷமாயிருந்தது. அவருக்கு எல்லா சார்ஜூம் ஒப்புக்கொடுத்து, ஏறக்குறைய ரூ. 500 Bank-ல் இருந்ததையும் கணக்குடன் கொடுத்தேன். அவரை என் சிநேகிதர் சிலபேருக்கு அறிமுகப் படுத்திவிட்டு ரகசியமாகவே புறப்பட நினைத்தேன். ஆனால் என்னிடத்தில் தமிழ்ப்பாடம் கேட்ட என் உபாத்திமார்களி லொருவராகிய எஸ். வேதநாயகம் என்பவர் என் பிரயாணத்தை ரகசியமாய் வைக்காமல் Sudder Bazaar-இல் இருந்த பெரிய மனுஷருக்கெல்லாம் வெளிப்படுத்திவிட்டார். அவர்கள் ஒரே நாளில் ரூ. 750 சேகரித்து, நான் மறுநாள் புறப்படுமுன்னே என்னைக் கண்டுகொள்ள வருவோம் என்று தெரியப்படுத்தினார்கள். எனக்கு செய்தி சொல்ல வந்தவர்கள், என் பிராண சிநேகிதர்களான செங்கல்வராய முதலியாரும் பொன்னுசாமி பிள்ளை

யுமே. ஒருவர் Commissariat Office-இல் Manager; ரூ. 300 சம்பளம். மற்றவர் Paper Currency Office-இல் Manager ரூ. 600 சம்பளம். இவர்கள், "ஐயா! நீங்கள் திருட்டள வாய் போகிறது சரியல்ல. நீங்கள் போகிறதை ஒரு மாசத்திற்கு முன்னலேயே அறிந்து கொண்டு, வீட்டிற்கு இரண்டு நாள் வீதம் விருந்து வைத்து உங்களை மரியாதையாய் அனுப்ப நினைத்தோம். ஆனால் நீங்கள் போகிறதை எங்களுக்கு ஒளித்தீர்கள். நீங்கள் பணத்தின் மேல் ஆசைவைக்காவிட்டாலும் உங்கள் குடும்பத்துக்கு உதவியாக கையில் கொடுக்க ரூ. 500-ம் சுமார் ரூ. 250க்கு அம்மாளுக்கும் பிள்ளைகளுக்கும் பட்டுகளும் வாங்கி வைத்திருக்கிறோம். நாளை காலை 10 மணிக்கு நாங்கள் கூட்டமாய் வந்து வாத்தியத்துடனே கப்பலில் வழியனுப்பிக் கொள்ளுவோம்." என்றார்கள். நான் அவர்களுக்கு, "இந்தியாவுக்கு போனால் நாட்டுப் பாதிரி தேவனுடைய வேலையை விட்டு விட்டு பெரிய மனுஷருடைய தயவையும் பணத்தையும் சம்பாதிக்கப் போனன் என்று வசையாய் நினைப்பார்கள். அது எனக்கும் விசேஷமாய் என் ஆண்டவருக்கும் வெட்கம். நாளைக்கு வெறுங்கையாய் வந்தால் உங்களிடம் வழி விட்டுக் கொள்வேன். மற்றபடி தெரியாமலே போவேன். இது உறுதி." என்று சொல்லியனுப்பினேன்.

காலை 8 மணிக்கு என் சபையார் ஒரு மோதிரமும், ஒரு (Address-ம்) வந்தனோபசார பத்திரமும் கொண்டு வந்து வழியனுப்பிக்கொண்டார்கள். மோதிரத்தை பின் காலத்தில் கர்த்தருடைய ஊழியத்தில் செலவழித்தேன். பத்திரம் இன்னும் இருக்கிறது. 9 மணிக்கு பெரிய ஆரவாரத்துடன் Sudder Bazaar சிநேகிதர்கள் வரக்கண்டேன். ஒரு குதிரை Gharry-ஐ எட்ட நிறுத்தி வைத்திருந்தேன். அதற்கு முன்பே என் சாமான் எல்லாம் கப்பலில் போயிருந்தது. நான் அவசரமாய் ஒரு துண்டில் "Sudder Bazaar அன்பர்களே! நான் உங்க

ளிடத்தில் ஒரு துரும்பும் வாங்கமாட்டேன். உங்கள் பணத்தை ஏதாவது தர்மத்திற்கு உபயோகியுங்கள். உங்கள் அன்புக்கு நன்றியுள்ளவனுயிருக்கிறேன்." என்று எழுதி வேதநாயகம் உபாத்தி கையில்கொடுத்துவிட்டு வண்டியேறி வேகமாய் போய் கப்பலில் உட்கார்ந்துகொண்டேன். எல்லோரும் மிகவும் விசனமும் வெட்கமும் பட்டார்களாம். செங்கல்வராய முதலியார் நடந்த சமாசாரத்தை எழுதி வேதநாயகத்தின் கையில் கொடுத்து தபாலில் அனுப்பினுர். கடிதத்தை வாசித்து, பிறர் யாரும் அறியாதபடி கொளுத்திவிட்டேன்.

ஆகிலும் 1889-ம் ௵ நான் சென்னப்பட்டணத்திற்கு மாற்றப்பட்டபோது, இந்த செங்கல்வராய முதலியார் சென்னை யில் என்னைத்தேடிவந்து கண்டுபிடித்தார். என் பெண்சாதியை தங்கை முறை பிடித்து, இரங்கூனில் நடந்த சமாசாரத்தை முழுவதும் வெளிப்படுத்தி, என் பெண்சாதிக்கு விசன மூட்டி விட்டார். அந்தக்காலத்தில் எனக்கு 6 பிள்ளைகளும் ரூ. 40 சம்பளமுமிருந்தது. அதினுல் கஷ்டப்பட்டவளுக்கு, நான் அவ்வளவு தொகையையும் வேண்டாமென்று தள்ளினது சகஜமாகவே பெரிய அநியாயமாய் தோன்றினது. அவர் என்னையும் என் குடும்ப முழுமையையும் கோர்ட் ரங்காநத வீதியில் (George Town), தம் சொந்த வீட்டுக்கு அழைத்துப் போய் இரண்டு நாள் நல்ல விருந்து கொடுத்து அனுப்பினுர்.

1887-ம் ௵ ஏப்ரல்-மீ மத்தியில், நான் "ஆசியா" கப்பலிலேயே ஏறி சென்னை கரைபிடித்தேன். கப்பலில் வாந்தி பேதி அநேகருக்கு கண்டுவிட்டது. நான் இருந்த அறைக்கு நேரே பிதானமும் (Awning) திரையும் போட்டு ஒரு சிறு இடத்தை மறைத்து அதில் அந்த வியாதி கண்டவர்களை போட்டார்கள். தினந்தோறும் இரண்டு ஒன்று செத்துக் கொண்டே வந்தது. செத்தவர்களை கடலில் எறிகிறதை

விநோதமாய்ப் பார்த்தேன். பிரேதத்தை இரண்டு கைகளிலும் இரண்டு கனமான இரும்பு பாளங்களை வைத்துக்கட்டி மண் நிரப்பின சிறு சிறு பைகளை சிரசுமுதல் பாதம் வரையில் அடுக்கி கோணிப்பாயில் சுருட்டி தைத்து தூக்கி ஒரு நீட்ட பலகையில் வைத்து கப்பல் விலாப்புரத்தில் கொண்டுபோய் சாய்த்து விடுவார்கள். பிரேதம் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துபோம்.

---

## அத்தியாயம் 10.

---

### Winkel ஐயருடன் செய்த சுவிசேஷ வேலை. அவருடைய வளர்ப்பு தகப்பனாகிய கனம் J. M. N. Schwartz ஐயரின் மரணம்.

**நா**ன் சென்னை கரை பிடித்தவுடன் என்னை மாயவரத்திற்கு மாற்றியிருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டேன். அது மனதிற்கு பிடிக்கவில்லை. Pamperin ஐயர் பொறையாற்றில் தன்னோடுகூட நானும் இருக்க சம்மதிப்படாதிருந்தார். ஆனால் நான் ரங்கூனுக்கு புறப்படுமுன் பொறையாற்றுக்கே என்னுடைய பிள்ளைகளுடைய படிப்புக்காக திரும்புவேன் என்கிற ஏற்பாட்டுடன் ரங்கூன் போயிருந்தேன். அப்படியிருந்தும் Pamperin ஐயருடைய தூண்டுதலினால் என்னை மாயவரம் மாற்றியிருந்தார்கள். நான் மாயவரம் போனபொழுது அந்த ஸ்டேஷன் Superior ஆகிய E. Winkel ஐயர், நானும் அவரும் வாலிபர்களானபடியால் வயது சென்ற பாக்கியம் ஐயருடைய ஆலோசனைப்படி நடக்க வேண்டுமென்று எனக்குச் சொன்னார். அவருக்கு, “உமக்கும் அவருக்கும் போதுமான ஆலோசனை சொல்ல எனக்குத் தெரியும். உம்மோடு வேலை செய்யமாட்டேன்.”

என்று சொல்லி பொறையாற்றிற்கே போய் 4 மாதம் உட்கார்ந்து விட்டேன். தரங்கையில் சங். C. F. Kremmer ஐயர் ஆலோசனைச் சங்கத்து தலைவராயிருந்தார். அவரிடத்தில், "நான் ஆலோசனை சங்கத்தாரிடம் முந்தி சங்கேதஞ் செய்தபடி, பொறையாற்றை விட்டு போகமாட்டேன்; எனக்கு சம்பளம் மாதம் மாதம் இங்கேயே கொடுக்க வேண்டும்." என்றேன். அப்படி 4 மாதம் வெறுஞ் சம்பளம் வேலை செய்யாமல் வாங்கிக் கொண்டிருந்தேன். 4 மாதத்திற்கு பிறகு Kremmer ஐயர் என்னை அழைத்து, "மாயவரத்துக்குப்போக முக்கியமான தடை என்ன ?" என்று கேட்டார். "ஸ்டேஷனை நடத்த தனக்குத் திராணி" யில்லை என்று வெளியரங்கமாய் அறிக்கையிட்ட Winkel ஐயருக்கு கீழ் நான் வேலை செய்ய மாட்டேன். அவர் பாக்கியம் ஐயருக்கு அடிமை. நான் அடிமைக்கு கீழ் அடிமையாயிருக்க இஷ்டம் இல்லை. Winkel ஐயர் எனக்கு கீழ் வேலை செய்தால் போவேன். அப்படியில்லாவிட்டால் ரங்கூனுக்குப் போய் பெரியவேலை சம்பாதித்துக்கொள்ள எனக்குத் தெரியும்." என்றேன். அவர் Winkel ஐயருக்கு ஒரு கடிதம் எழுதி என் கையில் கொடுத்தார். அதைக் கொண்டு போய் நான் Winkel ஐயருக்கு கொடுத்த போது ஸ்டேஷன் சார்ஜ் முழுமையும் என் கையில் விட்டு, தான் தமிழ் கற்கிறதில் நேரத்தை செலவிட்டார். பணக் கணக்கு மாத்திரம் என் கையில் வேண்டா மென்று அவர் கையில் விட்டு விட்டேன். இந்நாள் பரியந்தம் பணக்கணக்கு என் கையில் வைக்கிறதேயில்லை.

வெகு சீக்கிரத்தில் Winkel ஐயர் அண்ணன் தம்பிபோல் நேச உறவாட துவங்கினர். அவருடைய குதிரையை எனக்கு சவாரிக்கு கொடுத்தார். நான் குதிரை சவாரி கற்றது அங்கே தான். அது என் உடம்புக்கு மிகவும் சுகமாயிருந்தது. நான் வெளியிலிருந்து சாயந்திரம் வீட்டுக்கு வர சில விசை இரவு

8, 9, மணி ஆகும். இன்னும் கலியாணம் பண்ணுத Winkel ஐயர், நான் வரும் வரையில் என் பெண்சாதி பிள்ளைகளுடன் பேசிக்கொண்டிருந்து நான் வந்த பின் தன் வீட்டுக்குப் போவார். சில விசை வீட்டில் தாளிதம் பண்ணின வாசனையினாலே நாக்கு ஊறி சமையலான பதார்த்தங்களை வாங்கி சாப்பிடுவார். அவர் சிநேகம் தாவீதுக்கு யோனத்தானின் சிநேகம்போல் எனக்கு அருமையாக இருந்தது. அவர் தமிழ் கற்றபின், பரீட்சை கொடுக்கிறதற்கு முன்னுக என்னுடன் கிராமங்களுக்கு வர ஆசைப்பட்டு என்னோடு வருவார். நாங்கள் இருவரும் அவருடைய சமையல்காரன் சமைத்துப் போட, இடங்கள் தோறும் ஒரு வாரத்திற்கு தங்கி வருவோம்.

1888-ம் ௵, மார்ச்சுமீ 23-ம் உ, நாங்கள் கஞ்சா நகரம் என்ற ஒரு கிராமத்தில் வெகுநேரம் இந்துக்களுக்கு பேசிவிட்டு "பனம்பள்ளி" பள்ளிக்கூடத்தில் வந்து தூங்கினோம். பனம்பள்ளிக்கும் மாயவரத்திற்கும் மூன்று மைல். பதினொரு மணி வரையில் பேசிக்கொண்டிருந்து தூங்கினோம். விடியற் காலம் மூன்று மணிக்கு விளக்குக் கொளுத்தி என்னை யெழுப்பினர். நான் எழுந்து மணி பார்த்தேன். மூன்றுமணியாயிருக்கக்கண்டு மறுபடியும் படுத்தேன். அவர் கைக்குட்டையைத் தண்ணீரில் நனைத்து, என் முகத்தைத் துடைத்தார். நான் ஜெர்மன் பாஷையில், "தூக்கத்தை கெடுக்காதேயும், சும்மாயிரும்" என்று தூங்க ஆரம்பித்தேன். அவர், உங்களுக்கு ஒரு நல்ல விசேஷம் இருக்கிறது, எழுந்திருங்கள்" என்றார். "தூக்கத்தைப் பார்க்கிலும் எனக்கு நல்ல விசேஷம் இல்லை" என்று படுத்தேன். "அதைவிட நல்ல விசேஷம் இருக்கிறது. நீங்கள் பல்லை விளக்குங்கள்" என்றார். நான், கலகலவென்று சிரித்து, "பல்லை விளக்குவதற்கும் நல்ல விசேஷத்திற்கும் சம்மந்தம் என்ன? என்றேன். அவர் இரண்டே வார்த்தை ஜெர்மனில் சொன்னர். "Geduld

(பொறுமை)! Gehorch (கீழ்ப்படி)!" என்றார். நான் உடனே பல் விளக்கி, "கீழ்ப்படிந்தாயிற்று, என்ன செய்தி?" என்றேன். அவர், "நீங்கள் இராத்திரி செம்மையாய் சாப்பிட வில்லை. வீட்டிற்குப்போனால் சாதம் சுறுக்காய் அகப்படாது. வெண்ணை தடவின இந்த ரொட்டித் துண்டுகளையும், இரண்டு முட்டைகளையும் சாப்பிட்டுவிட்டு குதிரை ஏறி உங்கள் வீட்டுக்குப் போகலாம்" என்றார். நான் சாப்பிட்டுவிட்டு "குதிரை எங்கே?" என்றேன். அவர் சேணத்துடன் குதிரையைக் கொண்டுவந்து, "குதிரை ஏறுமுன் நீங்கள் எனக்கு ஒரு வாக்கு கொடுக்கவேண்டும்" என்றார். அறியா மல் எப்படி வாக்கு கொடுப்பேன்?" என்றேன். அவர் உங்க ளுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்கு என் பேரைக் கொடுத்து, என்னை ஞானத் தகப்பனுக்கவும் வேண்டும்" என் றார். நான் ஆகட்டும் என்று சொல்லி, குதிரையைத் தட்டி விட்டு ½ மணி நேரத்திற்குள் வீடு வந்து சேர்ந்து தாயையும் பிள்ளையும் பார்த்து கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்தி னேன்.

அந்த வருஷத்தில் மாயவர மிசியோன் வட்டத்தை படம் (Map) எழுதி இரண்டு பகுதியாக்கி, ஒரு பகுதியை நானும், மறுபாகத்தை Winkel ஐயரும் District Senior ஆக ஒப்புக் கொள்ள வேண்டுமென்று தரங்கை ஆலோசனை சங்கத்தா ருக்கு Winkel ஐயர் சிபார்சு பண்ண, அவர்களும் சம்மதித் தார்கள்; ஆகிலும், என்னை சென்னப்பட்டணத்திற்கு மாற்ற அவசியம் தோன்றினபடியினால், இந்த யோசனை மாறிப் போயிற்று. அந்த வருஷமே சுயாதீனம் அடையக்கூடியவ னுக இருந்த நான், 1909-ம் வருஷத்தில்தான், சென்னை புரசை பாக்கத்திற்குக் குருவாயிருக்கும்போது இராயபுரத்திற்கு District Senior ஆக்கப்பட்டேன். District Senior என்றால், ஒரு மிஷன் வட்டத்திற்கு மேலதிகாரி. அவருக்குக் கீழ்

இரண்டொரு இந்திய குருக்களும் உபதேசிமார், வாத்திமார் முதலிய மிஷன் ஊழியரும் இருப்பார்கள். அவர்களுடைய வேலை செவ்வையாய் நடப்பதற்கு இவர் உத்தரவாதி. இந்த மாதிரி சுயாதீனம், 1909-ம் வருஷத்திற்கு முன், ஒருவருக்கும் கொடுக்கப்படவில்லை. நான்தான் அந்த சுயாதீனத்தை முதலில் பெற்றவன்.

சென்னைக்கு மாற்றல் கொடுப்போம் என்று ஆலோசனைச் சங்கத்தார் சொன்னபோது, முதலில் அது எனக்கு சம்மதமாயிருந்ததில்லை. அவர்களுக்கு நான் எழுதினதாவது: "நான் பல இடங்களிலும் போய் கஷ்டவேலை செய்து அலுத்து இருக்கிறேன். சென்னையில் பலகட்சிகளும் கலகமும் மிகுந்திருக்கிறதென்று அறிகிறேன். அதற்கு, இதுவரையில் எந்த இடத்திற்கும் மாற்றப்படாமல் இருக்கிற தரங்கை சாமுவேல் ஐயரை அனுப்புங்கள்." அவர்கள் அப்படியே அவருக்கு உத்தரவு கொடுத்து தயாராயிருக்கச் சொல்லி விட்டார்கள். அவர் பாதி சாமான்களை விற்று இன்னும் பாதியை விற்கிறதற்குள், புரசபாக்கத்து சபை, 'சாமுவேல் ஐயர் தங்களுக்கு வேண்டாம்' என்று ஆலோசனைச் சங்கத்தாருக்கு எழுதி விட்டார்கள். அதற்குமேல் 'உங்களுக்கு வேண்டிய நாட்டையரைத் தெரிந்துகொள்ளுங்கள்' என்று சங்கத்தாரினுடைய உத்தரவு போக, அவர்கள் 'N. தேவசகாயம் நாட்டையரைத் தவிர வேறு நாட்டையர் வேண்டாம்' என்றார்களாம். சங்கத்தார், "நீ போகமாட்டேன் என்றால் அந்த சபை வீணாய் போகுமே" என்றார்கள். சீமையிலிருந்த Collegium சங்கத்தாரும், "சென்னை சபை கேட்கிறபடி தேவசகாய நாட்டையரை அனுப்புங்கள்; அவருக்கும் அடங்காமல் கலகம் செய்தால் அந்த சபை இனி நமக்கு வேண்டாம். அதை விட்டு விடுவோம்" என்றார்களாம். நான் அடுத்த வருஷம் யோசிப்பதற்கு கெடுகேட்டு மாயவரத்திலே தங்கினேன். இது நிற்க:

என்னுடைய வளர்ப்பு தகப்பனுகிய கனம் J. M. N. Schwartz ஐயர் 1885-ம் ஆு முதலே உபகாரச் சம்பளம் (Pension) வாங்கி தரங்கையில் தம்முடைய சொந்த வீட்டில் வாசம் பண்ணினுர். அவர் ஒரு காரணத்தினுலே நான் ரங்கூன் போவதற்கு முன்னேயே மனத்துவேஷமாகினுர். அந்தக் காரணம் என்ன வென்ருல் ஒரு பஞ்சம மாணுக்கனை குருவேலைக்கு கனம் Ihlefeld ஐயருக்கு சிபார்சு செய்து அந்தப் பெயர் சீமைச் சங்கத்தாரால் உறுதியாக்கப்பட்டபின் என் வளர்ப்பு தகப்பனுக்கு, "அது காலத்திற்கு முந்தி நடந்தது" என்று விசன முண்டாயிற்று. அவருடைய கொள்கை என்ன மாயிருந்த தென்ருல், பஞ்சமர்கள் உபாத்திமார்களும் உபதேசிமார்களுமாயிருக்கலாம். ஆனுல் அவர்கள் குருக்களாயிருப்பதற்கு இன்னும் ஒரு தலைமுறை செல்லவேண்டும், என்று உறுதியான அபிப்பிராயம் இருந்தது. ஆகையினுலே என் சொந்தமாணுக்கனுன வி. சாமுவேலை குருவேலைக்கு உடனேயே எடுக்கவேண்டு மென்று என் உபாத்தியாயராகிய Ihlefeld ஐயரை முடிக்கிவிட்டது என் தகப்பனுக்கு என்மேல் கோபத்தை மூட்டி விட்டது. ஆகையினுல் நான் ரங்கூனுக்கு போகு முன்னும் போய்திரும்பின பின்னும் அவரை முகமுகமாய் பார்க்காதிருந்தேன். அவர் அதினுலே மன வேதனையடைந்து, அவருடைய அருகிலிருந்த இன்னெருவளர்ப்பு பிள்ளையாகிய பி. மிகாவேல் இடத்தில், "நான் சாகிற காலங்கிட்டிவிட்டது. என் பிரிய மகன் தேவசகாயத்தைப் பார்க்க ஆசையாயிருக்கிற தென்று எழுது. அவனை பெண்சாதி பிள்ளைகளோடு வரச்சொல்லு. நான் எல்லாரையும் ஆசீர்வதிக்கவேண்டும்." என்று கேட்டுக் கொண்டாராம். கடிதம் வந்த காலத்தில் மாயவரம் ஸ்டேஷனில் எனக்கு ஒழிவில்லாத வேலையிருந்ததினுல் ஏறக்குறைய இருபது நாள் தாமதித்தேன். அப்பொழுது "நம் தகப்பனுடைய கண் மங்கிவிட்டது. உயிர் இருக்கும் போதே உன்னையும் உன் குடும்

பத்தையும் சீக்கிரம் வரச் சொல்லுகிறார். உன்னையும் உன் பெண்சாதி பிள்ளைகளையும் ஆசீர்வதிக்காமல் சாக மனதில்லை என்கிறார்." என்ற கடிதம் வந்தது.

நான் வேலையில் இருந்தபடியே விட்டுவிட்டு என் பெண்சாதி பிள்ளைகளுடன் உடனே புறப்பட்டேன். நாங்கள் போன போது அவர் மெத்தைமேல் இருந்தார். நான் ஆள் அனுப்பி வந்துவிட்டேன் என்று சொல்ல சொன்னேன். அவர் உடனே எங்களை மேலே வரச்சொன்னார். நான் போனவுடன் அவருக்கு கண்தெரியவில்லை என்று அறிந்தேன். ஏனெனில் அவர் என்னை அறிந்துகொள்ள முடியவில்லை. நான் விசனக்குரலாய், "Papa, நான் வந்துவிட்டேன்" என்றவுடன், அவர் எழுந்து, என் கழுத்தைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விட்டார். நான் அவரிடத்தில் என்தப்பை மன்னிக்க மன்றாடினேன். அவர் மனப்பூர்வமாய் மன்னித்து என் தலைமேலும் என் பெண்சாதி பிள்ளைகள் தலைமேலும் கை வைத்து பேர் பேராக ஆசீர்வதித்தார். என் அருமைத் தகப்பனை நான் உயிரோடே கண்டது அதுதான் கடைசி முறை. பிறகு அவருடைய மரணச் செய்தி கேட்டு போய் அங்கலாய்த்தேன்.

---

## அத்தியாயம் 11.

சென்னை அடைக்கலநாதர் சபைக்கு பாதிரியாராக நியமிக்கப்பட்டது. B. A. பரீட்சையில் தேறினது. மகளின் விவாகம்.

நான் கர்த்தருக்குள் ஆலோசனை செய்து மிகவும் கலகம் நிறைந்த புரசபாக்கம் அடைக்கல நாதர் சபையை ஒப்புக்கொண்டு அதை மேய்க்க சம்மதித்தேன். அதன்மேல்

1889-ம் ௵ ஜனுவரி-௴ 13-ம் ௳ கனம் Pamperrien ஐயர் சமுகத்தில் மேற்படி சபை எனக்கு ஒப்புக்கொடுக்கப் பட்டது.

நான் சபையை ஒப்புக்கொண்ட துவக்கத்தில் புரசை அடைக்கல நாதர் சபைக்கும் இராயபுரம் விடி வெள்ளிச் சபைக்கும் ஒவ்வாமை மேலிட்டிருந்தது. அந்த சபைகள் சுக துக்கங்களை ஒன்றுக்கொன்று தெரிவித்துக்கொள்ளுகிற தில்லை. இராயபுரம் சபையைச் சேர்ந்த S. பொன்னையா வேதநாயகம்பிள்ளை புரசை Fabricius பாடசாலையில் தலைமை உபாத்தியாயராக விருந்தார். அவர் இராயபுரச்சபையின் பகையை மனசில் வைத்துக்கொண்டு, புரசபாக்கத்து அடைக் கலநாதர் சபை பிள்ளைகளுக்கு பள்ளிக்கூடத்தில் மிகுந்த இடைஞ்சல் செய்து வந்தார். அதினால் Fabricius பாடசாலை உபாத்திமார் ஒரு கட்சியை புரசபாக்கம் சபைக்கு விரோத மாய் உண்டாக்கியிருந்தார்கள். புரசை சபையில் தாழ்ந்த உத்தியோகத்திலிருந்தவர்களை 'அச்சுக்கட்டிகள்' (Compositos), 'புஸ்தகக்கட்டிகள்' (Book-binders) என்று உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் நிந்தையாய் பேசி அவமதித்ததினால் 'அச்சுக்கட்டிகள்' என்று ஒரு கட்சி எழும்பியிருந்தது. தவிற 'வஸ்தாதிகள் கட்சி' என்ற ஒரு கட்சியும் இருந்தது. இவற்றை யெல்லாம் பார்க்க 'சொரணம்பிள்ளை' யென்ற ஒரு கட்சி இருந்தது. அடைக்கலநாதர் கோவிலையும் செப்புத்துரை யையும் (Cemetery) சில வருஷங்களுக்கு முன் மரித்துப் போன சொரணம்பிள்ளையுடையது என்று இந்தக் கட்சியார் வாதித்து, அந்த இரண்டு சொத்துக்களும் சொரணம்பிள்ளை யினுடைய மூத்த குமாரனாகிய தேவநாயகம் பிள்ளையைச் சேர்ந் தது என்று வாதாடினார்கள். இவர்களெல்லாரும் சபைபொதுக் கூட்டங்களுக்கு வரும்போது கட்சி கட்சியாகவே பிரிந்து உட்காருவார்கள். ஒவ்வொரு கட்சியும் தடிகளுடனேவரும்.

நான் வரச் சில வருஷங்களுக்கு முன் Lutheran சபைத் தலைவராகிய Schwartz ஐயரும் அவருக்கு உதவி புரியும் குருவாயிருந்த Ihlefeld ஐயரும் அடைக்கல நாதர் சபையை சந்திக்க (Visitation) வந்தபோது, Rev. R. Handmall (Senior) சபைக் கூட்டத்தை வரவழைத்து, அதற்கு மேற் கூறிய இருவரையும் வரும்படி வேண்டினார். அவர்கள் சம்மதித்து வந்தபிற்பாடு வழக்கம் போல் கூட்டம் நடத்தப்பட்டது. அதில் ஏதோ ஒரு கட்சி குறும்பாய் பேசினபோது, விளக்கு களை அணைத்துவிட்டு கைத்தடிகளினால் இருட்டில் சிலம்பம் பழக ஆரம்பித்தார்கள். அப்பொழுது Schwartz ஐயரும் Handmall ஐயரும் அடிக்கு தப்பும்படி மேசைக்கு கீழ் ஒழிந் தார்கள். Ihlefeld ஐயர் ஜன்னல்மேல் ஏறி தப்பினார். கை சலிக்க ஒருவரையொருவர் அடித்த பிற்பாடு, ஒவ்வொருவராய் வெளியே ஓடிப்போய்விட்டார்கள். இப்படிப்பட்ட முரட்டு சபையை மேய்ப்பதற்கு நான் எம்மாத்திரம்! இதை ஆண்ட வருக்கு முன்பாக வைத்து அவருடைய ஆலோசனையைத் தேடி, சில காலத்திற்குள் பல கட்சிகளை ஒழிக்கக்கூடிய வனானேன். ஆயினும் என் ஊழியத்தின் முந்தின 6 வருஷங் களில் இந்த கட்சிகளினால் உண்டான வேதனை உபத்திரவமும் தாங்கக்கூடியதாயிருந்ததில்லை. அநேக நாட்களில் கலக்கம் இருந்ததினால் இரா நித்திரை வராமலிருந்தது. கர்த்தரோ ஒவ் வொரு கலக்கத்திற்கும் நீங்கும்படி எனக்கு வெளிப்படுத்திக் கொண்டேயிருந்தார்.

என் சுய குடும்ப நிலைமையினாலும் எனக்கு பல சங்கடங் கள் இருந்தன. குறைவான சம்பளம் அவைகளில் முக்கிய மானது. நான் சென்னைக்கு வந்தபோது எனக்கு ஆறு பிள்ளை கள் இருந்தனர். சம்பளம் 35 ரூபாய். இதைக்கொண்டு பிள்ளைகளுக்கு பள்ளிக்கூட சம்பளமும் புஸ்தகங்கள் உடுப்பு முதலியவைகளும் கொடுத்து, அவர்களை கல்வி பயிற்றுவிக்க

எவ்வாறு கூடுமென்று நானும் என் மனைவியும் மனக் கலக்கத்துடன் ஆலோசனை செய்து வந்தோம். என் மனைவி வெகு சிக்கனமாய் குடுத்தனம் பண்ணக்கூடியவளாயிருந்தும், அவ்வளவு குறைந்த சம்பளத்தில் அவளுடைய சாமர்த்தியம் என்ன செய்யக்கூடும்! இதை ஆண்டவரிடத்தில் தெரிவித்து ஆலோசனை கேட்டேன். அவர் B. A. பரீட்சை கொடுக்கும்படி ஆலோசனை சொன்னார். அந்தக் காலத்தில் எனக்கு வயசு 39. கர்த்தர் கொடுத்த வெளிச்சத்தில், B. A. பரீட்சையை இரண்டு பாகமாய் தெரிந்துகொண்டு, ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு வருஷத்தில் ஒப்பேற தீர்மானித்தேன். 1889-ம் ௵ செப்டெம்பர் மாதத்தில் நடந்த தமிழ் இங்கிலீஷ் பரீட்சைகளில் இரண்டாம் வகுப்பில் தேறினேன்.

மீதி மறுபாகம் ஒப்பேறுவதற்கு வழி தெரியாமல் தியங்கினேன். அப்பொழுது என் பிராண சிநேகிதனாகிய S. Subramanya Iyer, Manager, Government Examination Office, Nungambakam, Madras, என்னிடம் வந்து, "Logic and Philosophy" என்ற பகுதியில் B. A.-இன் மறு பாகத்தை கற்று ஒப்பேற ஆலோசனை சொன்னார். அதற்கும் புஸ்தகங்களை வாங்க கையில் பணம் இல்லாதவனாயிருந்தேன். அதற்கு அவன், "ஒரு புஸ்தகமும் வாங்க அவசியமில்லை. வேண்டிய புஸ்தகங்களையெல்லாம் நானே உனக்கு இரவலாக கொண்டுவருவேன்; தவிர, Madras Christian College, Presidency College இவ்விரண்டு கலாசாலைகளிலும் கொடுக்கப்படும் உபந்நியாசங்களை நீ எழுதிக்கொள்ளும்படி தகுந்த மாணவர்களிடம் வாங்கித் தருவேன்" என்று உறுதி சொல்லி இரண்டு வருஷமளவும் சலிக்காத முயற்சியுடன் தன் வாக்கை நிறைவேற்றி வந்தார். ஆதலால் 1890—1891-ம் வருஷங்களில் B. A. Syllabus பிரகாரம், மேற்கூறிய பாடங்களை செவ்வையாய் ஆயத்தம் பண்ணிக்கொண்டேன். 1892-ம் ௵ ஜனவரி

மாதத்தில் நடந்த பரீட்சையில் நான் மூன்றும் வகுப்பில் ஒப் பேறி, B. A. முழுப்பட்டத்திற்கும் உரியவனுனேன். அதே காலத்தில் என் மூத்த மகள் ஞானதீபம் அம்மாள் "Higher Grade for Women" என்கிற பரீட்சையில் சிறந்த விதமாய் தேறினுள். அதுவும் தவிர என் மூத்த மகன் அபிஷேக நாதன் Matriculation பரீட்சையில் முதல் வகுப்பில் தேறி ஞன். இதினுல் ஆண்டவர் என் பங்கிலிருக்கிறது என்னை விரோதித்தவர்களும் அறிந்துகொண்டார்கள். சபையாருக்கும் மற்றெல்லோருக்கும் இது ஆச்சரியமாயிருந்தது.

1892-ம் ஹூ மார்ச்சு மாதத்திற்குப்பின், எனக்கு சம்ப ளத்தை ரூ 50 ஆக்கினுர்கள். ஆகிலும் என் மூத்த மக ளுக்கு கலியாணம் செய்வதற்கு சமயம் வந்தபடியால் கலியா ணச் செலவுக்கு என்ன செய்கிறது என்று தெரியாமலிருந் தேன். 1892-ஹூ மேமீ முதல் தேதிவரையில் முதல் ஓலை கூறவும் துணிவு வரவில்லை. மாப்பிள்ளை பணக்காரராயிருந்த தில்லை. அவர் அந்த வருஷத்தில் Senior B. A. மாணுக்கராய் Christian College-இல் வாசித்தார். அவர் என் பெண்ணையே விவாகம்பண்ண மன உறுதி பண்ணிக்கொண்டு கிராமத்தி லிருந்த தன் விதவையாகிய தாயாரை சம்மதப்படுத்தி, மேற் படி மாதம் 15-ம் உயில் கலியாணம் வைத்துக்கொண்டார். நாங்கள் ஓலையை முற்றுவித்து கையில் ஒரு காசுமில்லாமல், கடன்கொடுப்பார் யாருமில்லாமல் குந்தியிருந்தோம். கலியா ணத்திற்கு எட்டே நாள் இருந்தது. என் பெண்சாதி, "இனி சும்மா இருக்கலாகாது. மிஷனிலாவது ஒரு ரூ. 100 கடன் கேட்டு வாங்கவேண்டும்" என்றுள். "கடன் செய்தியை விட்டுவிடு. கடனில்லாமலே பணம் வரவேண்டும்" என்றேன். என் பெண்சாதி பிரமித்து, "ஆகாசத்திலிருந்து தொப்பென்று விழுமா?" என்றுள். "அப்படி விழுந்தாலும் விழும். ஆள் மூலமாய் வந்தாலும் வரும்" என்றேன். "யாரிடத்தி

லிருந்து ?" என்ருள். "'உன் தேவனுகிய நானே உன் சுதந்தரமும் உன் பங்குமாயிருக்கிறேன்' என்று சொன்ன ஆண்டவரிடத்திலிருந்து" என்று பதில் சொன்னேன். அவள் மிகுந்த கோபத்தோடு என்னை விட்டுப்போனுள். அப்போது பகல் 12 மணியிருக்கும்.

அந்நேரத்தில் தெருக்கதவை யாரோ தட்டுகிற சத்தம் கேட்டது. நானே போய் திறந்தேன். அப்பொழுது யார் வந்தார்? என் உயிர்த்தோழனுகிய S. சுப்பிரமணிய ஐயர். அவரும் நானும் 'டா' பேச்சுக்காரர். "அடா தேவசகாயம்! உன் மகள் கலியாணம் எப்பொழுது ?" என்ருர். "15-ம் தேதிக்கு நியமித்திருக்கிறது. நோட்டீஸ் தயாரானவுடன் உனக்கு முந்தி கொடுப்பேன்" என்றேன். "கலியாணச் செலவு எவ்வளவு வைத்திருக்கிருய்?" என்ருர். நான் மௌனமாயிருந்தேன். "கையை நீட்டு" என்ருர். நான் கையை நீட்டினபோது, கத்தையாய் Government Currency Note-களை என் கையில் வைத்து, "இதை உன் செலவுக்கு வைத்துக்கொள்" என்ருர். அவன் அந்த வருஷத்தில் எட்டு பிள்ளைகளுடன் ரூ. 60 வாங்கின ஏழையாயிருந்தான். நான் கடுதாசிகளைப்பிரித்து பார்த்தபோது ரூ. 150 இருந்தது. அவனுடனே, "இவ்வளவு தொகையை நான் எப்படி திரும்ப கொடுப்பேனென்று அறியேன். ஆதலால் கடன் சீட்டு எழுத மாட்டேன். ஈடு வைக்க என்னிடத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் உன் பணத்தை நீயே கொண்டுபோ" என்று அவன் சட்டை ஜேபில் திணித்தேன். அவன் அந்த நோட்டுகளை மறுபடியும் எடுத்து என் காலடியில் எறிந்துவிட்டு விரைவாய் வெளியே போனுன். நான் வாசற்படி போகுமுன் அவன் தெருவில் இறங்கி வெகுதூரம் போய்விட்டான். நான் நோட்டுகளை கையிலெடுத்து ஆண்டவருக்கு தோத்திரம் சொல்லி என் பெண்சாதியை அழைத்து, அவள் கையில்

நோட்டுகளைக் கொடுத்து, "இதை ஆண்டவர் ஆள் வழியாய் நமக்கு அனுப்பினார்" என்றேன். அவள், "எல்லாங் கேட்டுக்கொண்டுதானிருந்தேன். எனக்குந் தெரியும்" என்று சொல்லி ஆண்டவரிடத்தில் அதுமுதல் நம்பிக்கை வைக்கத் துடங்கினாள். கலியாணம் சீர்காழியில் நிறைவேறிற்று.

நாங்கள் சென்னைக்கு வந்தபின், நானும் என் மனைவியும் மணிஐயர் வீட்டுக்கு ஒரு வேளைச் சாப்பாட்டுக்கு வேண்டிய பச்சரிசி காய்கறிகள் முதலிய சகல பதார்த்தங்களும் எடுத்துக் கொண்டு போனோம். அது வரையில் மேற்படி தொகையை அவன் எனக்கு கொடுத்தது அவன் சமுசாரத்திற்கு தெரியாது. நான் அவனை தொகை கிடைத்த விதம், அவன் அந்த தொகையை எனக்குக் கொடுக்க மனம் வைத்த காரணம், எனக்கு பணம் இல்லை என்பதை அறிந்த விவரம் சகலத்தையும் ஒழிக்காமல் சொல்லவேண்டுமென்று கேட்டேன். அவன் Moderator வேலைக்கு மேற்படி தொகை தனக்கு கிடைத்ததாகவும், அதை தன் பெண்சாதிக்கும் தெரியாமல் Bank-இல் போட்டு அதற்கு சரிதொகை கிடைக்கும் வரையில் காத்திருந்து, பிறகு தன் பெண்சாதிக்கு தங்ககாப்பு போட நினைத்ததாகவும் சொன்னான். அப்படி கருதி Post office-க்கு எழுந்து போகையில், "போகாதே." என தன் உள்ளத்தில் ஒரு பெரிய குமுறல் உண்டானதாகவும், அது அபசகுனமென்று பயந்து வீட்டுக்கு திரும்பி விட்டதாகவும், மறு நாள் மேற்படி தொகையை எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு புறப்படும் போது, "தெய்வசகாயத்திற்கு கொடு." என்று தன் உள்ளத்தில் முழக்கம் உண்டாக, அவன், சற்று நின்று, "இவ்வளவு தொகை அவனுக்கு எதற்காக வேண்டும்" என்று தனக்குள்ளே விசாரித்தபோது, என் மகள் கலியாணம் கூடியிருப்பது ஞாபகத்தில் வர, "இதற்காகவா என்று கேட்டானாம். அவன் உள்ளம்," அதற்காகத்தான் உடனே கொண்டு

போ. என்றதாம். அவன், "நான் ஏழை. தெய்வசகாயம் வெறுங்கையன். இந்தத் தொகை மறுபடி எனக்கு எப்படி வரும்?" என்று கேட்டானும். "நானிருக்கிறேன் போ." என்று அவன் உள்ளத்திலே சத்தம் வந்ததாம். அவன் "இது அசரீரி வாக்கு" என்று துணிந்து, "ஏதோ ஓர் அதிசயம் நிறைவேறப்போகிறது" என்று மனதில் வைத்துக்கொண்டு மேல் விஸ்தரித்த பிரகாரம் பன்னிரண்டு மணி வேளையில் என் வீட்டிற்கு வந்து என் பெண்சாதியின் கோபம் ஆறுகிற தற்கு முன் பணத்தைக் கொடுத்துவிட்டுப் போனான். "இந்தத் தொகை உனக்கு கொடுக்க எனக்கு வழியில்லை. கடன் சீட்டு எழுதினாலும் வீண். இவ்வளவு தொகை நஷ்டம் உனக்கு வருவது எனக்கு சம்மதியில்லை. ஆயினும் நான் ஆராதனை செய்கிறவர் இந்த முழுத் தொகையையும் என் கையைக் கொண்டே உனக்குக் கொடுப்பார்" என்று அவனுக்கு சொல்லி வீட்டுக்குத் திரும்பினேன். அன்று சாயந்திரமே அவன் என்னிடத்திலே வந்து "பகவான் எனக்கு வேண்டிய அதிசயம் செய்தார்." இன்று நான் Office-க்கு போனபோது, நான் Acting-ஆக பார்த்த Manager வேலை எனக்கு உறுதி யான வேலையாய் போயிற்று. இது முதல் எனக்கு ரூ. 250 சம்பளம். இது நான் எதிர்பாராத விதமாய் கடவுளே எனக்கு செய்த உபகாரம். எங்கள் Office Manager நேற்று இறந்து போனார். இன்று அந்த வேலை எனக்கு காயமாயிற்று. நீ எனக்கு தொகை கொடுக்க வேண்டாம்" என்று பக்ஷமாக பேசினான். நான், "ஒருவரிலொருவர் அன்பு வைப்பதே தவிர வேறெந்த கடனும் ஒருவனுக்கும் பட்டிராதேயுங்கள்." என்கிற திருமொழியை அவனுக்கு எடுத்துக்கூறி, "உன் கடன் என் கையினாலேயே வரும்" என்று உறுதி சொன்னேன். அவன், "அது எப்படி வரும் என்று எனக்கு தெரியாது" என்று நகைத்தான். நான், "எனக்கும் தெரியாது" என்று சொல்லி அவனை வீட்டிற்கு அனுப்பினேன்.

அதற்கு இரண்டு வாரத்திற்கு பின், அந்தக்காலத்து Middle School பரீட்சையில் English-இலிருந்து தமிழில் மொழிபெயர்ப்பதற்கு நியமிக்கப்பட்ட பரீட்சகன் திடீரென்று அந்த வேலையை கைஉதறி விட்டபடியால், யாரோ சொன்ன யோசனையைக்கேட்டு, நான் அந்த வேலையை ஒப்புக்கொள் வேணு வென்று விசாரித்து Goverment Examination Office இலிருந்து எனக்கு கடிதம் வந்தது. அதை எடுத்துக் கொண்டு என் சிநேகிதனிடம் போய், "இது நீ · செய்த வேலையா?" என்று கேட்டேன். அவன் ஆச்சரியப்பட்டு, "நான் செய்த வேலை அல்ல. இது யார் செய்த வேலை யென்று நாளைக்கு சொல்வேன்" என்றான். அவன் Office-இல் மறு நாள் விசாரித்த பொழுது, " ஐயா நீங்கள் வருமுன்னே துரை மிகவும் ஆயாசப்பட்டு, இப்படி பதினோராம் மணி நேரத்தில் (eleventh hour) மோசம் பண்ணினானே! இதற்கு என்ன செய்யலாம்! " என்று தம்மைப் பார்க்க வந்திருந்த ஒரு இந்தியரைக் கேட்டார். அவர் இந்தப் பேரை துரைக்குச் சொல்ல அவர் பேரை உடனே பதிந்துகொண்டு அவருக்கு கடிதம் எழுதி அனுப்பிவித்தார்." என்று சொன்னார்களாம். என் பெயரை யார் துரைக்கு சொன்ன தென்று இதுவரையில் தெரியாது. பரீட்சை கடுதாசிகள் டிசம்பர் 1உயில் வந்தன. திருத்தி பரீட்சாபலனை அனுப்பினபோது எனக்குக் கிடைத்த தொகை சரியாய் ரூ. 150. அதை உடனே சுப்பிரமணியனுக்கு கொடுத்து ஆண்டவருடைய அதிசயத்தை தெரிவித்தேன். அவன் பிரமித்து "கிறிஸ்தவர்களுக்குள் தேவன் இருக்கிறது இப்பொழுது தான் தெரியும்" என்றான்.

---

63
6-36

சென்னை அடைக்கலநாதர் கோவில்.

இங்கே **21** வருஷம் (**1889—1910**) தேவசகாயம் ஐயர் தேவ ஊழியம் செய்தார்கள்.



# அத்தியாயம் 12.

---

## லுத்தரன் வாலிபரின் வேதாகம சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது அடைக்கலநாதர் சபையிலுள்ள தாறுமாறான விஷயங்கள்; அவைகளை சீர்திருத்தத்திற்கு கோண்டுவேந்த விதம்.

1893-ம் வருஷத்தில் புரசை அடைக்கலநாதர் சபைக்கும் இராயபுரம் விடிவெள்ளி சபைக்கும் இருந்த ஒவ்வாமையை நீக்கும் பொருட்டு இரு சபைகளின் முகாமை சங்கத்தாருடன் சமாதானமாய் கலந்து பேசி ஒருவாறு இராசி பண்ணினேன். அந்தக்காலத்தில் Leipzig Collegium சங்கத்தில் ஒரு புது Director ஏற்பட்டு (Von Schwartz) அவர் இந்தியாவின் Leipzig Mission Station-களை சந்திக்க புறப்பட்டு வருகிறார் என்கிற செய்தி அகப்பட்டது. அவர் சென்னைக்கு வரும் போது இரண்டு சபைகளுக்கும் இருக்கும் ஒவ்வாமை முற்றும் நீங்கியிருக்கவேண்டுமென்று இருசபைகளின் முகாமை சங்கத்தாருக்கு வெட்ட வெளிச்சமாய் தெரிந்தபோது, அவர்கள் பரிபூரண ஒப்புரவாகி இந்தியாவுக்கு வருகிற மிசியோன் தலைவரை ஏகோபித்து வரவேற்கவேண்டு மென்று தீர்மானஞ் செய்தார்கள். அந்தத் தீர்மானத்தைக் கொண்டு செலுத்தி மேற்படி தலைவர் வரும்போது, புரசை சபையார் இராயபுரம் சபையாரையும் நல்வரவேற்று அவர்களுக்கு ஒரு நாள் முழு மையும் விருந்து கொடுத்து உபசரிக்க வேண்டு மென்கிற நல் எண்ணம் பிறந்தது. Von Schwartz அவர்கள் இரண்டு சபை களின் ஒற்றுமையைப் பார்த்து மிகவும் சந்தோஷப்பட்டார் கள். ஏனெனில் இவர்களுக்குள் ஐக்கியம் இல்லாதிருந்ததை முன்னமே சீர்மையில் அறிந்திருந்தார். அந்நாள் முதல் இந்நாள் வரையில் நல்ல ஐக்கியம் உண்டாயிருக்கிறது. சுக துக்கங்களில் ஒருவரை யொருவர் அழைத்துக் கொள்கிறார் கள். விவாக சம்மந்தங்களும் நடக்கின்றன.

1894-ம் வருஷத்தில் எனக்கு இராப்பகல் இளைப்பாறுதல் கொடாமல் மனக்கலக்கம் உண்டாக்கிக் கொண்டிருந்த கட்சிகளெல்லாம் ஒழிந்து போயின. இதனால் ஒரு நற்பயன் விளைந்தது. என்னவெனில், எனக்கு மேல் அதிகாரியான Rev. J. Kabis ஐயர் இனி புரசைபாக்கத்து சபையின் கவலையொழிந்து சென்னபட்டணத்து சுற்று கிராமங்களிலே மிசியோன் வேலை செய்து புதுச்சபைகளை சேர்க்க கூடியவரானார். அவர் வெளி வட்டங்களில் செய்த வேலைகளினால் ஏறக்குறைய 3000 பேர் கிறிஸ்தவர்களாகி இந்நாள் வரையும் கிராமச் சபைகளில் இருக்கிறார்கள்.

'சபையைத் திருத்த வேண்டுமானால் சபையின் பிள்ளைகளைத் திருத்து' என்பது முன்னோரின் யோசனை. புரசை லுத்தரன் சபையாரின் பிள்ளைகள் அக்காலத்தில் பெரும்பாலும் சீர் அழிந்தவர்கள். பெற்றோர் வீடுகளில் ஜெபமாவது பிள்ளைகளை வளர்க்கும் கவலையாவது இருந்ததில்லை இரவும் பகலும் சபை வாலிபர்கள் கும்பு கும்பாய் தெருவில் நின்று கொண்டு சிற்றின்ப பாட்டுகளைப்பாடி வீண் பேச்சு பேசிக் கொண்டிருப்பார்கள். அதனால், புரசபாக்கத்தில், லுத்தரன் சபையையும் சபை வாலிபர்களையும் குறித்து சகலரும் நிந்தையாய் பேசிக்கொள்வார்கள். ஆகையால் முந்தி அப்பேர்பட்ட வாலிபர்களைத் திருத்த ஆண்டவரிடத்தில் ஞானத்தை கேட்டேன். அவர் தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் குடும்பத்தை சேர்ந்த V. வேதநாயகம் என்ற ஒருவரை என்னிடத்தில் அனுப்பினார். இவர் முன் காலத்தில் Central School-இல் என் மாணுக்கனாக இருந்து, பிற்பாடு புரசை Lutheran Fabricius பாடசாலையில் உபாத்தியாயர் வேலை செய்து பிறகு புரசை Methodist Episcopal அச்சு ஆபீஸில் Manger-ஆக இருந்தார். அவருக்கு லுத்தரன் போதகத்திலும் வேதபுஸ்தகத்திலும் சிறந்த அறிவு உண்டு. அவர் என்னிடம்

வந்து, " நம் சபையின் மாணுக்கர்களை Lutheran young Men's Bible Union என்ற பெயரால் கூட்டி திருவசனத்தை உபதேசிக்க எனக்கு உத்தரவு கொடுப்பீர்களா?" என்று கேட்டார். நான் நிரம்பின பிரியத்துடன் சம்மதித்து உடனே ஆரம்பம் செய்யும்படி தூண்டினேன். அக்காலத்தில் எனக்கு சபையின் பிரிவினைகளை நிவிர்த்திப்பதிலும், என்னுடைய B. A. பரீட்சையின் பின் பாகத்தை முடிப்பதிலும் சிந்தை செலுத்திக் கொண்டிருந்தேன். வேதநாயகம் பிள்ளை 1891-ம்-ஹு செப்டம்பர் மீ 27-ம்உயில் Lutheran young Men's Bible Union என்ற கூட்டத்தை கர்த்தருடைய நாமத்திலே துவக்கினர். அது இன்னம் நடந்து வருகிறது (27th May 1918.)

1892-ம் ஹு மத்தியில் மாணவர்களுக்கும் வேதநாயகம் பிள்ளைக்கும் ஒவ்வாமை நேரிட்டு அவர் அந்த வேலையை செய்யமாட்டேன் என்று விட்டுவிட்டார். அப்பொழுது என்னுடைய B. A. பரீட்சை முடிந்திருந்தபடியால் சபையின் நன்மையைக்கருதி இந்த வேலையை நானே செய்யத் துணிந்தேன். அதில் வேதத்தை வாலிபர்களுக்குத் தித்திப்பு ஆக்கும் பொருட்டு நானே வேதத்தை மிகுந்த பிரியமாய் படித்தேன். ஆண்டவருடைய ஒத்தாசையால் அநேக விசை அதின் ஆழங்களுக்குள் இறங்கி ஏறினேன். நான் என் விருத்தாப்பியத்தில் வேதத்தை என் முக்கியமான பாடபுஸ்தகமாகப் படித்தும் நான் இன்னும் முதல் பாடம் படிக்கும் சிறு குழந்தையைப் போல் இருக்கிறேன். தாவீது ராஜா, " உம்முடைய வேதம் மகா விஸ்தாரம் " என்று சொன்னது அவ்வளவும் சத்தியம். நான் அந்த வாலிபர்களுடன், வாலிபனைப்போல தாழ்ந்து கொண்டு, திருவசனம் எனக்கு இனித்த விதங்களையெல்லாம் அவர்களுக்கு தெரியும்படி பண்ணி, அவர்கள் வசனத்தில் பிரீதி வைக்கும்படி செய்தேன். கர்த்தருடைய ஆவியானவர்

இந்த சிறு கூட்டத்தை கிறிஸ்தவ அன்புக் கூட்டமாக நெருக்கி அணைத்தார். அவர்களுடைய அன்பு சகோதர அன்பாய் இருக்கிறதைப் பார்த்து அவர்களுக்குள், அன்பு சிற்றுண்டி விருந்து (Social Treats) ஏற்படும்படி செய்தேன். அவர்களுக்குள் சில பஞ்சமர்கள் இருந்தார்கள். இந்த வழக்கத்தினால் வாலிபருக்குள் ஜாதிவேற்றுமை வெறுப்பு அற்றுப் போயிற்று. இவர்களில் வெகுபேர் இப்போது உத்தியோகஸ்தர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய வல்லமையினால் லூத்தரன் புரசை சபையில் ஜாதிவேற்றுமை வெறுப்பு அடியோடே தொலைந்துபோயிற்று. அதற்குமுன், ஆதிதிராவிடர் தமிழர் வெவ்வேறாய் கோவிலில் பாய்மேல் உட்காருவார்கள். ஆதிதிராவிடர் பக்கத்து பாயை தமிழர் பக்கத்து பாய் தொடாமல் துண்டாய் விரித்திருக்கும். இராப்போஜனத்தில் தமிழ் ஆண்களும் பெண்களும் உட்கொண்டபின் மற்ற ஆண்களும் பெண்களும் உட்கொள்ளுவார்கள். ஆதிதிராவிடர் எந்த விதத்திலும் தமிழரோடு வந்து கலவாதபடி பரி. ராப்போஜன ஆராதனையில் இரண்டு வஸ்தாதிகள் கையில் தடியுடன் நிற்பார்கள். கர்த்தருடைய கிருபையால் ஐந்து வருஷங்களுக்குள் இந்த வித்தியாசங்களெல்லாம் செத்துப்போய் 1897 முதல் ஆராதனையிலும் திருப் பந்தியிலும் அந்நியோந்நியமும் ஐக்கியமும் உண்டாகிவிட்டது.

ஏறத்தாழ 500 ஆத்துமாக்களுக்குமேல் அதிகமாயுள்ள அடைக்கலநாதர் சபையை நானும் என் உபதேசியாரும் இடைவிடாமல் சந்தித்து அவர்களுடைய, நன்மை தீமைகளை எல்லாம் அறிந்துகொண்டு அவரவர்களுக்கு செய்யவேண்டியது அன்போடு செய்ததினால் ஏழு வருஷங்களுக்குள் சபையின் இருதயம் என்னோடு ஒட்டிக்கொண்டது. சபையின் தாறுமாறுகளை நான் லேசாய் கண்டிக்கவும் திருத்தவும் கூடியதாயிருந்தது. கட்சிகளுக்குள் இருந்த ஒவ்வாமையை அவரவர்களு

டைய நடுவில் அனுதாபத்தோடு இருந்துகொண்டு ஆராய்ந் தேன். ஜெபத்தினாலும் வசனத்தினாலும் எடுத்துக்காட்டி உணர்த் தினேன். அதினால் அவரவர் தங்கள் தங்கள் நன்மை தீமைகளை செவ்வையாய் அறிந்து தகாதவைகளை விடவும், தகுந்தவை களை அனுசரிக்கவும் பழகிக்கொண்டார்கள். இப்படிப்பட்ட முயற்சிகளிலே இந்தச் சபை முழுமையும் வளர்ந்த சிறு பிள்ளை கள்தான் என்று கண்டேன். அவர்களுக்குள் வேலை செய்கிற தற்கு எல்லாரோடும் அனுதாபப்படுகிற தகப்பன் உள்ளம் தேவை என்றும் கண்டேன். அந்த இருதயத்தை ஆண்டவரி டத்திலே கேட்டுவாங்கி நீண்டகாலமாய் அந்தச் சபையிலே உழைக்க செய்த ஆண்டவருக்கு ஸ்தோத்திரம். அவர்களை கர்த்தருடைய வசனத்தின்மேல் தேட்டையுடையவர்களாக்க திருவசனத்தை பாலும் தேனும்போல் ஊட்டுகிற வரத்தை ஆண்டவரிடத்தில் கேட்டேன். அந்த வரத்தை ஆண்டவர் நான் எதிர்பார்த்ததிலும் அதிகமாக எனக்குக் கொடுத்ததை வரவர ஜனங்கள் கோவில் கொள்ளாமல் வந்ததினால் அறிந் தேன். காலம் செல்ல செல்ல, லுத்தரன் சபையை இகழ்ந்து ஒதுக்கின வேறு சபை கிறிஸ்தவர்களும் நமது கோவி லுக்கு வரவும், அவர்களுடைய வாலிபர்கள் நமது Lutheran Young Men's Bible Union-இலே சேர்ந்து படிக்கவும் துடங்கி னார்கள். இதனால் காலக்கிரமத்தில் துண்டாய் பிரிந்திருந்த லுத்தரன் கிறிஸ்தவர்களுக்கும் இதர சபை கிறிஸ்தவர்களுக் கும் நேச ஐக்கியம் உண்டாயிற்று. ஒருவருக்கொருவர் நன்மை தீமைகளில் சொல்லிக் கொள்ளுகிற வழக்கம் உண்டா யிற்று. உபதேசத்திலும் நல்லொழுக்கத்திலும் லுத்தரன் சபைக்கு ஒரு மதிப்பு கிடைத்தது.

சபைக்கும் சீமை ஐயர்மாருக்கும் எந்நாளும் உண்டா யிருந்த விகற்பம் அடைக்கலநாதர் கோவிலையும் செப்புத் துரையைப் (Cemetery) பற்றியும் இருந்தது. கோவில் கட்ட

டத்திற்கு சென்ற சிலவில் சீமை சங்கத்தார் C. F. Cremmer ஐயரைக்கொண்டு முக்கால்வாசித் தொகையும் உள்ளூர் சபை மகா-ள-ள-ஸ்ரீ சொர்ணம்பிள்ளை ராசப்பிள்ளை எனபவர்களைக் கொண்டு கால்வாசித் தொகையும் கொடுத்தார்களாம். அதினால் கோவில் பட்டா (Land Tenure Right) மேற்படி மூவர் பேருக்கும் இருந்தது. இம்மூவர்பேரும் இறந்துபோய் அவர்களுடைய பிள்ளைகள் காலத்திலே சொர்ணம்பிள்ளை கட்சி என்று ஓர்கட்சி எழும்பி "கோவிலும் செப்புத்துரையும் தங்களுக்கே சொந்தம்; மிசியோனுக்கு சொந்தம் இல்லை" என்று வாதித்து வந்தார்கள். இதனால் புரசை நாட்டையர்களுக்கும் ஐயர்மாருக்கும் நேரிட்ட தொந்தரவுகள் கொஞ்சநஞ்சமில்லை. சொர்ணம்பிள்ளை கட்சி கோவில் தங்களுடையதென்று சொல்லி கோவிலை விற்க எத்தனித்தார்கள். கோவில் கதவை ஆராதனை முடிந்த பிறகு தாங்கள் ஒரு பூட்டைப்போட்டு பூட்டிக்கொள்வது வழக்கம். ஐயர் அதற்கு மேல்பூட்டு ஒன்று கோவில் மிசியோனுடையதென்று சொல்லி பூட்டுவார். ஒரு ஐயர் பூட்டினபொழுது, அவர் தாடியைப் பிடித்து ஆட்டி "நீ எப்படி எங்கள் கோவிலைப் பூட்டுவாய்?" என்று பயமுறுத்தி கதவைத் திறந்தார்களாம். இப்படியே செப்புத்துரையையும் பூட்டிவைத்துக்கொண்டு கலகம் செய்து வந்தார்கள். பிணம் வாசலில் வந்தபிறகு, "பூட்டின பூட்டை திறக்கமாட்டோம். யார் உத்தரவின்மேல் கொண்டு வந்தாய்?" என்று நாட்டையருடன் வம்பு செய்வார்கள். Police-க்கு எழுதி Commissioner வந்து பயமுறுத்தின பிறகு திறப்பார்களாம்.

கோர்ட்டிலே பிராது பண்ணினபோது, கோர்ட்டார் 'மூன்று பேருக்கும் உள்ள பட்டாவை ஒருவர் பேருக்கு தற்காலத்து இராஜாங்கத்தின் பிரகாரம், Collector-உடைய அனுமதி பெற்று எழுதிக்கொண்டு வாருங்கள்" என்று

சொல்லிவிட்டார்களாம். Collector இப்பொழுது இருக்கிற பிரகாரமே இருந்து போகட்டும்" என்று தீர்த்தார். இக்காரியங்கள் இந்த நிலைமையில் இருக்கும் பொழுது இச்சபையார் என்னை தாங்களே தெரிந்து கொண்டபடியால் ஆரம்பத்தில் என்னுடன் மரியாதையாகவே இருந்து கொண்டு வந்தார்கள். செப்புத்துரையையும் கோவிலையும் இவர்கள் பூட்டவில்லை. ஆரு வருஷங்கள் சென்ற பிறகு சபையை ஒரு நாள் கூப்பிட்டு, " ஆண்டவருடைய கோவில் கிறிஸ்தவர்களாகிய நமக்கு இருக்கவேண்டிய படியால் இதை Mission Attorney-பேருக்கு எழுதி பட்டா பெற்றுக் கொள்வோம்" என்று சொன்னேன். அதற்கு அவர்களில் ஒருவர், " Mission Attorney விற்றுப் போட்டால் என்ன செய்கிறது?" என்று வினவினர். " ஆம், நீர் கேட்ட கேள்வி நல்ல கேள்விதான்," என்று மெச்சி, " அதைத் தடுக்கும் பொருட்டு எதிர் நடைபத்திரம் (Hypothecation deed,) அதாவது ' இந்த சொத்து நான் இங்கேயிருக்கும் வரையில் மேற்பார்க்கிறவனாயிருக்கிறேன். இந்த மிசியோன் இந்த ஊரை விட்டு எடுபடும் பொழுது கோவில் புரசை சபையார் ஏற்படுத்தும் காரியதரிசியிடம் ஒப்விக்கப் படும்' என்று எழுதி வாங்கிக் கொள்ளலாம்." என்று ஆலோசனை சொன்னேன். இதற்கு சம்மதியாமல் ஆரு மாதம் கலகம் செய்தார்கள். பிற்பாடு மறுபடியும் சபையாரை அழைத்து " நீங்கள் சொர்ணம்பிள்ளை வாரிசுகளுக்குத்தான் பட்டா எழுதிக்கொள்ளுங்கள். தேவனுடைய ஆலயம் எல்லாருக்கும் பொதுவாயிருப்பது நல்லது என்று பார்த்தேன். அப்படி உங்களுக்கு பிரியமில்லை. உங்கள் விருப்பம்போல் ஒருவருக்கு பட்டா எழுதிக்கொள்ளுங்கள்" என்றேன். அதற்கு, " உங்கள் பேருக்கு பட்டா எழுத யோசித்திருக்கிறோம்" என்றார்கள். " அப்படி வேண்டவே வேண்டாம். எனக்கு பிற்பாடு என் பிள்ளைகள் ' தங்களுடைய சொத்து' என்று வாது பண்ணினால் என்ன செய்கிறது?" என்று

எச்சரித்தேன். அதற்கு, "உங்களையும் உங்கள் பிள்ளைகளையும் எங்களுக்குத் தெரியும். அப்படி சொத்துக்கு ஆசைப் பட்ட வர்களல்ல." என்று உத்தரவு சொன்னார்கள். "அது கூடவே கூடாது. இப்பொழுது நல்லவர்களாகக் காணப்படுகிற என் பிள்ளைகள் எனக்குப்பின் கெட்டவர்களாக மாறிவிடலாம்" என்று சொன்னேன். இவ்வாறு பலவிதமான ஒழுங்குகளைப் பற்றி தர்க்கித்தபிறகு, நான் துவக்கத்தில்சொன்ன ஆலோசனை அதாவது, 'Mission Attorney பேருக்கு பட்டா எழுதுவது' நல்லது என்று ஒப்புக்கொண்டார்கள். நான் உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்துவித்து ஒரு மாதமாக நோட்டீஸ் கோவிலில் போட்டு பட்டா எழுதப்பட்டது. இது முடிந்தபின், "தெரியாமலல்லவா இந்த நாட்டையரை நம்பி, கோவிலைக் கொடுத்துவிட்டோம்" என்று சொல்லி சிலர், "ஐயா கோவில் எங்கள் பேருக்குத்தான் இருக்கட்டும்" என்று பழைய வழக்குக்கு வந்தார்கள். "எல்லாம் எழுதி முடிந்து விட்டது. ஒரு மாதகாலமாக பட்டா எழுதப்போகிற விவரம் பிரசுரப்படுத்தியிருந்தது. ஆக்ஷேபித்தால் அப்போதே சொல்லியிருக்கவேண்டும். இப்போது ஒன்றும் செய்யமுடியாது" என்று உணர்த்தினேன். ஆனாலும் கலகப் பிரியர் ஆனபடியினாலே "கோவில் நம்முடைய கோவில். பஜனை வைப்போம்" என்று திரண்டுகொண்டு என் அனுமதியில்லாமல் நாலு கூட்டத்தார் கோவில் Compound-க்குள் புகுந்தார்கள். நான் போய் "உங்களுக்கு சிறுபிள்ளைகளுக்கு இருக்கும் புத்திகூட இல்லையே! இனிமேல் என் அனுமதியில்லாமல் நுழைய முடியாது. அத்து மீறி நடந்தால் போலீசார் வசம் ஒப்புவிக்கப்படுவீர்கள். உங்களை சட்டப்பிரகாரம் தண்டித்து விடுவார்கள். அப்படி உங்களுக்கு கோவிலைச் சுற்றிப் பாடி பஜனை இன்று செய்யவேண்டுமென்றால் என் அனுமதியுடன் செய்யலாம்" என்று நியாயம் சொன்னேன். அவர்கள் வம்பு செய்யவேண்டுமென்று வந்தவர்களானபடியால், பஜனை செய்

யாமல் போய்விட்டார்கள். இது முதல் 'கோவில் தங்களுடையது, செப்புத்துரை தங்களுடையது' என்று வாதித்தது ஒழிந்து, இந்தச் சபையில் நெடுங்காலமாக இருந்த கலகத்தின் ஆணிவேர் எடுபட்டுப்போயிற்று.

---

## அத்தியாயம் 13.

---

### பள்ளிக்கூடவேலை.
### கிறிஸ்துமார்க்க விசுவாச கோள்கைகளின் ஆராய்ச்சி.
### ஆபத்தான வியாதியினின்று பிழைத்தது.

1889 முதல் 1895 வரையில் புரசபாக்கம் லூத்தரன் பெண்பாடசாலை என்னுடைய மேல் விசாரணையிலிருந்தது. அது துவக்கத்தில் Primary வகுப்புகள் உடையது மாத்திரமாயிருந்தது. மாணாக்கியர்களின் தொகை ஏறத்தாழ நாற்பது. அதற்கு நாலு உபாத்தினியர்களும் ஒரு தையல் போதினியு மிருந்தார்கள். மிகவும் சீர்கேடான நிலைமையிலிருந்தபடியால், அந்தத் தெருவிலேயே London Mission பாடசாலையும் அதற்கு இரண்டு தெருவுகளுக்கு அப்பால் Scotch Mission பாடசாலையும் ஏற்பட்டு பலத்துப்போயின. German ஐயர்மார்கள் பெரும்பாலும் பாடசாலையை நடத்த பயிற்சியற்றவர்களா யிருந்தார்கள். ஆகையால் பாடசாலையைத் திருத்தவேண்டுமென்பது அவர்கள் மனசுக்கு படவில்லை. எனக்குமுன் அடைக்கலநாதர் சபை குருவாயிருந்தவர் யாதொரு சுயாதீனமும் இல்லாமல் German Missionary-க்கு உதவி புரிகிறவராய்மாத்திரம் இருந்தார். ஆகையால் Missionary-இன் கீழ் அவர் இந்த பாடசாலையையும் ஒருவாறு மேற்பார்த்து அவருக்கு Report செய்வார். நான் சுயாதீனமாக சபைவேலை செய்து, கூட இந்த பாடசாலையையும் மேல்

விசாரித்தேன். வரவர மூன்று வருஷங்களுக்குள் எனக்கு ஒழிந்த நேரங்களையெல்லாம் பாடசாலையிலே செலவழித்து அதை நல்ல சீருக்கு கொண்டுவந்து, அக்காலத்தில் வழக்கம் பெற்றிருந்த Middle School தரத்துக்கு உயர்த்தினேன். அப்பொழுது ஏறத்தாழ 120 மாணுக்கிகளும், Matriculation பரீட்சை கொடுத்த Head-Master-ம் ஆரு உபாத்தினிகளும் செவ்வையாய் அதில் உழைத்து, வருஷந்தோறும் 6, 7 மாணுக்கிகளை Middle School பரீட்சைக்கு அனுப்பி தேற்றுவித்தார்கள்.

சபையின் நிலைமையை நேர்நேரில் கண்ணேடி அப்போதைக்கப்போது செய்யவேண்டிய சீர் செய்வதும், அநேக விஷயங்களைத் தீர யோசிக்கவும் நேர்ந்ததால் சில சமயங்களில் இரவு இரண்டு மணி வரையில் நித்திரையற்றிருந்தேன். இப்படி நாலு வருஷங்களாய் நடந்து வந்தது. தவிர, வேத உபதேசங்களை பலபல சபைகளின் விசுவாச அறிக்கைகளை வைத்துக்கொண்டு வேதத்துக்கொத்த போதகம் எது என்பதை அநேக வருஷங்களாய் ஆராய்ந்து கொண்டேன். அந்த ஆராய்ச்சியில் எந்த எந்த சபையின் விசுவாச அறிக்கை வேதத்தின்படி சரியோ அந்தச் சபையை சேர்ந்து கொள்ள வேண்டுமென்று மன உறுதி பண்ணிக் கொண்டேன். இந்த ஆராய்ச்சி எனக்கு வெகு பிரயோஜனமாயிற்று. அதினால் வேத வசனத்தின் பல ரகசியங்கள் எனக்கு வெளிப்பட்டன. வேத வாசிப்பும் தேன்போல் என் மனதிற்கு தித்திப்பாயிற்று. இறுதியில் நான் கண்ட காட்சி என்னவென்றால், இங்கிலீஷ் சபையின் 39 Articles, Heidelburg Catechism, The Helvetic confession, The Scotch Kirk Larger Catechism, Calvin's Institutes இப்பேர்ப்பட்ட போத நூல்கள் லுத்தரன் சபை அறிக்கைகளின் விசேஷித்ததாகிய Augsburg Confession-இலிருந்து முளைத்தவைகளே தவிர

வேறல்ல. சிற்சில அற்ப விஷயங்களில் தவிர மற்றப்படி லுத்தரன் சபை போதகமே சத்தியத்துக்கு ஏற்றதென்று தெளிவாய்க் கண்டேன். அதனால், Anglican சபையிலும் Wesley சபையிலும் எனக்கு இரட்டிப்புக்கு அதிகமான சம்பளம் கிடைக்கக்கூடியதாயிருந்தும், நான் மனச் சாட்சியினால் கட்டப்பட்டு போகக் கூடாமலிருந்தேன். இவ்வாறு மன முயற்சி தேகமுயற்சி இடைவிடாமல் நடந்ததில் 1895-ம் வருடம் மார்ச்சு-மீ 19-ம் வ நான் வெகு அபாயமாய் வியாதிப்பட்டேன். அதற்கு 12 நாட்களுக்கு முன் எனக்கு வெகு நாள் பிராண சிநேகிதனாகிய பெரியநாயகம் ஐயர் கோயம்புத்தூரில் மரித்தார். அவருடைய கண்களை கடைசியாக நானே மூடினேன். அந்தத் துக்கமும் என் இருதயத்தில் ஓயாத நெருப்பாய் வெந்தது. எனக்கு வந்த வியாதி Heart Valvular Disease. அது அபாயகரமானதேயானாலும், நான் இந்நாள் வரையிலும் (29 th May 1918) ஆண்டவர் செய்த அதிசயத்தினால் பிழைத்திருக்கிறேன். அது காலைநேரத்தில் சபை சந்திக்க நான் போன நேரத்தில் வந்தது. திடீரென்று மார்படைத்து சுமர்ணையற்றவனாய் வீட்டிற்கு வண்டியிலே கொண்டுவரப்பட்டேன். ஒரு மாதம் என் நண்பராகிய முத்துசாமி டாக்டர் தன் சாமர்த்தியமெல்லாம் கூட்டி எனக்கு வைத்தியம் செய்தும் இனி பிழைக்கமாட்டேன் என்று அறிந்து என் வீட்டுக்கு வருவதை நிறுத்திவிட்டார். எனக்கு மிகவும் பிரிய சிநேகிதனான Rev. Joseph Gnanavolivu (S. P. G ஐயர்) தம்முடைய கோச்சு வண்டியை கொண்டு வந்து தினந்தோறும் என்னை Dr. Smith-இடம் கொண்டுபோனார். அவர் ஐரோப்பியர் வைத்தியத்தில் மிகப் பிரசித்தி பெற்றவர். அவர் 15 நாள் வரையில் எனக்கு வைத்தியம் செய்து, கடைசியாய் "இது தீராது; மோசமாய் முடியும்" என்று அனுப்பி விட்டார். நான் பின்னும் 1½ மாதம் Sick-leave வாங்கி இராயபுரத்தில் ஒரு வீடு எடுத்து என்னை மரணத்துக்கு ஆயப்படுத்

திக்கொண்டிருந்தேன். அக்காலத்தில் ஒரு துலுக்க வைத்தியன் கெட்டிக்காரனென்று கேள்விப்பட்டு அவனுக்கு ரூ. 130 வரையில் கொடுத்து என் பெண்சாதி எனக்கு வைத்தியம் செய்து வைத்தாள். அவன் வைத்தியத்தில் நான் பாயும் படுக்கையுமாய் ஒடுங்கிப் போனேன். இனி மரணம் கிட்டி வந்ததென்று அறிந்து, சீர்காழியிலிருந்த என் மூத்த மகளையும், மருமகனையும் குழந்தைகளுடன் வருவித்து, எல்லோருக்கும் ஆசீர்வாதங்கூறி, "இந்த மூன்று நாளைக்குள், நான் மறுமைக்குள் போவேன். அதின் பிறகு நீங்கள் இன்ன இன்ன விதமாய் நடந்துகொள்ளவேண்டும்" என்று திட்டமும் செய்தேன். B. A. வகுப்பில் படித்த என் மூத்த மகன் அபிஷேகநாதனை படிப்பை நிறுத்தி என் குடும்பத்தை சவரக்ஷணை செய்யும்படி ஏற்பாடு செய்தேன். செய்தும் மறுநாள் சாயந்திரத்திற்குள் என் பெண்சாதி அகோர வியாதிப்பட்டு எனக்கு வழக்கமாய் கொடுக்கிற பாலைக் கொண்டுவராமல் என் மகள் ஞானமங்களத்தின் மூலமாய் பாலை அனுப்பியிருந்தாள். அவளை அம்மா எங்கே யென்று கேட்டதற்கு "அம்மாள் உங்களுக்கு முன்னே இறந்து போவார்கள்! இனி என்ன செய்வோம்" என்றாள். அது என்னுடைய இருதயத்தில் ஒரு கத்தியைப்போல் அகப்பட்டது. நான் பாலைக்குடிக்க மனமில்லாமல், என் பெண்சாதியைப் பார்க்க பாயைவிட்டு எழுந்திருக்க சக்தியில்லாமல் அவள் ஒரு பக்கத்திலும் நான் ஒரு பக்கத்திலும் கிடந்தோம். அப்பொழுது நான் என் இருதயத்தை ஆண்டவரிடத்தில் உயர்த்தி, "கர்த்தராகிய ஆண்டவரே! நான் இப்பொழுது உம்மண்டை வர ஆயத்தமாயிருந்தும் என் பெண்சாதியின் மனக்குறைவின் நிமித்தம் கூடாதவனா யிருக்கிறேன். நாங்கள் இருவரும் இறந்து போனால் எங்கள் பிள்ளைகளை உமக்கு வளர்க்க யாரையும் காணோம். ஆகையால் எனக்கு இன்னம் 15 வருஷம் கொடுத்து, அதற்குள்ளாக என்னுடைய பிள்ளைகளை உம்

முடைய கையினுல் கைதூக்கிவிட்டு, ஆதரித்து, என்னை உம்மண்டை அழைத்துக்கொள்ள மன்ருடுகிறேன். இந்த ஜெபத்திற்கு உடனே உத்தரவு கொடும் ஆண்டவரே!" என்று ஜெபித்தேன். என்னை அறியாமல் நித்திரை பிடித்தது. அதற்குமுன் அநேக நாட்களாய் நித்திரை என்னை விட்டு ஓடிப்போயிற்று. எனக்கு வந்த அயர்ந்த நித்திரையில் நான் குறட்டைவிட்டு தூங்கினேனும். இரவு சுமார் ஒரு மணிக்கு குறட்டை ஓசை மிக பலத்ததினுல் என் பெண்சாதி மெதுவாய் நகர்ந்து என் அருகில் வந்து உட்கார்ந்து அது கடைசி மூச்சாயிருக்குமென்று நினைத்தாள். நினைத்து கண்ணீர் விட்டுக்கொண்டே உறங்கிவிட்டாள். நான் விடிந்து 7 மணிக்கு சுகமுள்ள நல்ல காலத்தில் செய்ததுபோல் வியாதியாய் இருந்ததெல்லாம் மறந்து எழுந்து நின்றேன். என் பெண்சாதி கண் விழித்து நான் நிற்கிறதைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள். அகோர பசியுடையவனுய் "நெய்யும் சர்க்கரையும் போட்டு, எனக்குக் கொஞ்சம் இடியாப்பம் கொடு" என்றேன். ஓடிப்போய் வாங்கிவந்தவள் என் சிநேகிதன் தம்புப்பிள்ளையின் ஆலோசனையை இடை வழியில் கேட்டு அந்த ஆகாரம் அவ்வளவும் எனக்குக் கொடுக்க பயந்தாள். ஏனெனில் "அது சாவுக்குமுன் வருகிற அகோரபசி" என்று எண்ணங் கொண்டாள். நானே முழு ஆகாரத்தையும் வாங்கி சாப்பிட்டு ஒரு லோட்டா நிறைய நீராகாரத்தையும் சாப்பிட்டு களையாய் நாற்காலியிலே அயர்ந்து குந்தியிருந்தேன்.

அதை என் பெண்சாதி பார்த்து, 'அதுவே மரணக் களை' யென்று நினைத்து, பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தாள். நான் அரைமணி நேரத்திற்குப்பின் களை நீங்கி எழுந்து, "எனக்கு ஆட்டுக்கறி ரசம் செய்து சோறு கொடுக்கவேண்டும்" என்று விரும்பினேன். என் பெண்சாதி, முன்னும் பின்னும் யோசித்ததைப் பார்த்து, "நீ ஒன்றும் யோசிக்காதே!

இது கர்த்தர் கொடுத்த சுகம். நான் சொன்னபடி ஆகாரம் தயார் செய்" என்று கேட்டுக்கொண்டேன். அவள் சந்தோஷத்தினால், தன் வியாதி தெளிந்து, நான் விரும்பின ஆகாரத்தை சுறுக்காய் செய்து கொடுத்தாள். அதன்பிறகு நான் மேற்சொன்னபிரகாரம் தான் இரவில் என் அருகில் உட்கார்ந்த சங்கதியெல்லாந் தெரிவித்து அன்று இரவில் தனக்கு உண்டான சொர்ப்பனத்தையும் தெரிவித்தாள். அந்த சொர்ப்பனத்தில், புரசை அடைக்கலநாதர் ஆலயத்தில் தான் எல்லாருக்கும் முந்தி கோவிலுக்கு வந்து உட்கார்ந்ததாகவும், எதிரிலிருந்த பிரசங்க மேடையில் சில பிள்ளைகள் நின்றதாக வும், அவர்களுக்கு மேலிருந்த விமானம் (Sounding Board) நிலை கழன்று விழப்போகிறதாகவும், அவள் "பிள்ளைகள்! பிள்ளைகள்!" என்று அலறிக் கூவினதாகவும், அப்பொழுது ஓர் பெரியவர் அவளைக் கையமர்த்தி பிள்ளைகளை ஒவ்வொரு வராய் வெளியில் தூக்கிவிட்டதாகவும், அதன் பிறகு அந்த விமானம் மெதுவாய் வந்து, விழுந்ததாகவும் கண்டாள். அது என்னுடைய மரணத்தை நிச்சயமாகவே குறித்ததென்று நினைத்தாள். நான் பிழைத்துக்கொண்டதைக் கண்டு ஆச்சரி யப்பட்டு, "அந்த சொர்ப்பனம் என்னத்தைக் குறித்தது" என்று கேட்டாள். நான், "அது உன்னையும் உன் பிள்ளை களையும் குறித்தது. நான் பண்ணின ஜெபத்திற்கு ஆண்டவர் உனக்கு உத்தரவு கொடுத்தார். உன் பிள்ளைகளெல்லாம் கர்த் தர் கைதூக்கி விட்டபின் நான் மறுமைக்குள் போவேன்" என்றேன். இப்படி அற்புதமாய் சுகம்பெற்று இப்பொழுது 23 வருஷம் (29 th May 1918) ஆகிறது.

---

# அத்தியாயம் 14.

## லுத்தரன் தாய்மார் கூட்டம் ஸ்தாபித்தது. தன் மகள் ஞானமங்களத்தின் மரணம்.

1896-ம்ஹூ Doctor-உடைய சிபார்சில் நான் ஒரு வருஷம் சென்னைக்கு வெளியிலே வாசம்பண்ண நேர்ந்தது. அப்பொழுது என்னுடைய மேலானவர்கள், எனக்கு இரண்டுவகை வேலை கொடுத்தார்கள். முதலாவது புதிதாய் தரங்கையிலிருந்து சீர்காழிக்கு மாற்றப்பட்டிருந்த Central பாடசாலைக்கு Manager ஆகவும், இரண்டாவது இன்னும் என் பொறுப்பிலேயே இருந்த புரசை அடைக்கல நாதர் சபைக்கு உத்தரவாதமுள்ள குருவாகவும் நியமித்தார்கள். சீர்காழி சபைக்கு என் கீழ் வேலைசெய்ய N. Devasahayam பிரசங்கியாரையும் சென்னை புரசை அடைக்கல நாதர் சபையில் வேலை செய்ய வருஷ முதற் பாகத்தில் ஞானபிஷேக ஐயரையும், பின் பாகத்தில் Rev. T. S. S. யாக்கோபு ஐயரையும் கொடுத்தார்கள். அந்த வருஷத்தில் என் ஞாபகத்தில் சீர்காழியிலிருந்து சென்னைக்கு பலவித முகாந்தரங்களினால் நாலுமுறை பிரயாணம் செய்யவேண்டியதாயிருந்தது. வருஷத்தின் பின் பகுதியில் Central school management-ஐ கனம் C. J. Sandegren ஐயர் ஒப்புக்கொண்டார். அதினால் என்னுடைய உத்தரவாதமும் கவலையும் ஒருவாறு தீர்ந்தது.

1897-இல் சென்னை புரசை சபை விசாரணையை மறுபடியும் நேரில் ஒப்புக்கொண்டேன். அப்பொழுது Lutheran young Men's Bible union போலவே Lutheran Mother's union ஒன்று ஏற்படுத்தவேண்டுமென்று என் சபை பெண்பாலர் என்னை வருந்தி கேட்டபோது, நான் ஜெபத்துடன் ஆலோசித்து ஒரு தாய்மார் கூட்டம் ஏற்படுத்தினேன்.

அதற்கு என் சபையின் பெண்பாலர்களும் இதர சபை பெண் பாலர்களும் வந்தார்கள். ஆயினும் திருவசனத்தை பெண்டீருடைய ஜீவியத்திற்கு ஏற்க ஆண்பாலர் விளக்குவது எளிதல்ல என்பதை பலமுறையுங்கண்டு என்ன செய்யலாமென்று யோசித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது 1896-ம் ஹு February வரையில் என் விசாரணையிலிருந்த பெண்பாடசாலை Emma von Soden என்ற மிசியம்மாள் கையில் போயிற்று. அந்த அம்மாள் சீர்மையிலேயே வேத அறிவில் மிகத் தேறினவர்கள். 'தாய்மார் கூட்டத்தை அவர்கள் நடத்துவார்களா?' என்று கேட்டதில், பாடசாலை விசாரிப்பிலே தனக்கு அதிக சோலி இருப்பதாகவும், தனக்கு தாய் அனுபோகம் இல்லாதபடியால், தாய்மாருக்கு இதமாய் உபதேசம் செய்ய முடியாதென்றும் மறுத்துவிட்டார்கள். அப்பொழுது சபை சந்திப்பில் எனக்கு நல் உதவி செய்துவந்த என் மனைவி தனக்கு கல்வி அறிவு இல்லாதபடியினால் மிகவும் துக்கப்பட்டு மேற்படி வேலை பழுதாய் போகாதபடி என்னால் இயன்றமட்டும் அந்தக் கூட்டத்தை நிறுத்தாமல் நடத்த வேண்டினாள். அப்படியே செய்து வந்தேன். ஆயினும் பலதடவைகளில் அது என் மனசுக்கு திருப்தியாயிருந்ததில்லை. என் பெண்சாதி சபை சந்திப்பில் எனக்கு செய்த நல்உதவி என்னவென்றால், சாயந்திரம் மூன்று மணி முதல் வெளிக் கிளம்பி என் ஏழைச் சபையாரில் பலர் வீடுகளைச் சந்தித்து, குறைச்சலுள்ளவர்களுக்கு பல சகாயங்கள் செய்து எனக்கு தெரிவிக்கவேண்டியவைகளைத் திட்டமாய் தெரிவித்து வாந்திபேதி முதலிய மோசமான வியாதிகள் உண்டான காலங்களில் கைவிடப்பட்ட வியாதியஸ்தரை தானே இரவிலும் பகலிலும் கவனித்து அவர்களுக்கு ஆகாரமும் மருந்தும் கொடுத்து வந்தாள். ஒருமுறை தகப்பனும் தாயும் இரண்டு பிள்ளைகளும் அடங்கிய ஒரு முழுக் குடும்பமும் வாந்திபேதியால் பீடிக்கப்பட்டு ஒருவர் சகாயமும் இல்லாமலிருந்தார்கள். அவர்கள் என் பெண்சாதிக்கு ஆள்

அனுப்பினபோது, நாங்களிருவரும் போய் அந்தக் குடும்பத்துக்கு செய்யவேண்டிய சகல சகாயமும் செய்து ஒருவராயிலும் சாகாமல் கர்த்தருடைய கிருபையால் காப்பாற்றக் கூடியவர்களானோம்.

இப்படி இரண்டு வருஷம் இடைவிடா முயற்சி செய்து உழைத்ததில் சபையாருடைய அன்பு எங்களிருவருக்கும் பரிபூரணமாகக் கிடைத்தது.

1895-ம் வருஷம் செப்டெம்பர் மீ 21-ம் தேதி என் இரண்டாம் மகள் மரித்ததால் அவள் கலியாணத்திற்காக வைத்திருந்த பணத்தினால் அவளுக்கு கல்லறை கட்டினோம். அவள் பேர் எஸ்தர் ஞானமங்களம். அவள் பிறந்த தேதி ஜூன் மீ 21, 1881. இந்தத் தேதி எப்பொழுதும் என் ஞாபகத்தில் வரும். ஏனென்றால், நான் மரணப்படுக்கையில் ராயபுரத்திலிருந்த காலத்தில் அந்த தேதியில் அவளுடைய பிறந்த நாளானபடியால், ஆசீர்வாதம் வாங்க என் தலைமாட்டில் வந்து நின்றாள். அவள் வந்தது எனக்குத் தெரியாது. என்னைப் பார்க்கிறதற்கு இராயபுரம் விடி வெள்ளிச்சபை மூப்பனாகிய S. தம்புப்பிள்ளை வந்து என் முகத்தில் கலக்கத்தைக் கண்டு அதற்கு காரணம் விசாரித்தார். "நான் சற்று நேரத்திற்கு முன் கலக்கமான ஒரு சொப்பனம் கண்டேன். அதில் என் மகள் மங்களத்தை ஒரு கையிலும் தாவீதை ஒரு கையிலும் பிடித்துக்கொண்டு இந்த இராயபுரம் கடலோரத்தில் உலாவினேன். திடீரென்று பெரிய அலை பொங்கி எழுந்து எங்களை அடித்துக் கொண்டு போயிற்று. அந்நேரத்தில் என் மகன் தாவீது என்னை கெட்டியாய் பிடித்திருந்தான். மங்களம் கை நழுவி காணாமற்போனாள். நான் தாவீதைக் கரையில் கொண்டு வந்து வைத்து, மங்களத்தை நடுவே தண்ணீரில் தேடி அகப்படவில்லை. இது தான் என் கலக்கத்துக்கு காரணம்" என்று

சொப்பனத்தை சொன்னேன். அதற்கு அவர், "இரண்டு பிள்ளைகளுக்கும் ஜன்னி பிறக்கும்; ஒரு பிள்ளை தவறிப்போகும். ஒரு பிள்ளை தப்பித்துக்கொள்ளும்" என்று சொப்பனத்தை நான் கேட்காமலே வியாக்கியானம் செய்தார். அப்படியே அதே வருஷத்தில் August 28-ம் தேதியில் இருவருக்கும் ஜன்னி (Typhoid fever) வந்தது. தாவீது பிழைத்துக் கொண்டான். ஞானமங்களம் சில நாட்களாய் ஸ்மரணையற்று ஆஸ்பத்திரியில் September மீ 21-ம் தேதியில் மரித்தது. அன்று காலை 6 மணிக்கு நல்ல புத்தி தெளிவு வந்து, "அப்பா, அம்மை எங்கே?" என்று கேட்டாளாம். கிட்டேயிருந்தவள் "இதோ சீக்கிரம் அழைக்கிறேன், பொறு." என்றாளாம். மங்களம் அந்த அம்மாளைப் பார்த்து, "அவர்கள் வருமுன் நான் இறந்து போவேன். நான் ஆண்டவரிடத்திலே போகிறேன் என்று அவர்களுக்குச் சொல்லு" என்று காலை நீட்டி, கையைக் குவித்து.

மரிக்கும் கிறிஸ்தின் ஆவியும்
வதைக்கப்பட்ட தேகமும்
என் தேகம் ஆவி யாவையும்
நன்றாய் குணப்படுத்தவும்.

என்று துவக்குகிற 50-ம் ஞானப்பாட்டை மெதுவாய் சொல்லி, அதின் கடைசி வார்த்தைகளாகிய,

நான் என்றும் உம்மைத் தொழவே
வரவழையும் கர்த்தரே.

என்று முடிந்தபின் அவளுடைய ஆவி அவளைவிட்டு பிரிந்தது அவளுடைய பக்கத்திலே வியாதியாயிருந்த ஓர் பெண்பிள்ளை அந்த அமைச்சலான மரணத்தையும் ஆறுதலான வார்த்தைகளையும் பார்த்து கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் தன்னை சந்திக்க வந்த பூமாலை ஐயரைக் கெஞ்சி, அந்த ஞானப்பாட்டு

முழுமையும் என்னிடத்தில் எழுதி வாங்கிக் கொண்டாள். அவள் அந்த ஞானப்பாட்டையே ஓயாமல் ஜெபித்து அவளும் பாக்கியமாய் மரித்தாள். ஞானப் பாட்டுகளின் அருமை இதனால் தெரியும்.

---

## அத்தியாயம் 15.

---

### ஓர் மகமதியன் ஐயரின் போதனையினால் கிறிஸ்தவனானது.

1906-ம் வருடம் ஏப்ரல் மாதத்தில் சுமார் 25 வயதுள்ள ஒரு மகமதியன் காலை 7 மணிக்கு என் வீட்டிற்கு வந்து "Rev. Devasahayam யார்" என்று என்னைக் கேட்டான். "நான் தான்" என்றபோது, அவன் ஒரு English Bible-ஐ காட்டி, "இது முழுமையும் எனக்கு பாடம். நான் கிறிஸ்து மேல் நம்பிக்கை வைக்கிறேன். ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள ஒரே தடை. அது என்னவென்றால், ஒரு தேவன் மூன்று ஆட்களாய் இருக்கக்கூடு மென்று என் மனதுக்கு பொருந்தவில்லை. அதைப் பொருந்தச் சொல்லும்படி சிலோன் முதல் சென்னை வரையில் கிறிஸ்தவ Reverend-களையெல்லாம் கேட்டுக்கொண்டே வருகிறேன். ஒருவரும் சொல்வாரில்லை. சென்னையில் ஒரு வாரமாய் சீமை Reverend-களையும் தமிழ் Reverend-களையும் கேட்டு வருகிறேன். அவர்கள் 'அது ரகசியம், ரகசியம், போ, போ,' என்றுசொல்லி அனுப்பிவிட்டார்கள். ரகசியமானாலும் புத்திக்கு பொருந்த வேண்டாமா? என்று கேட்டேன். ஒருவர் மாத்திரம் என்னிடத்தில் பட்சமாகி 'உன் கேள்விக்கு உத்தரவு சொல்ல ஒருவருமில்லை. இத்திரன்

மிஷன் Reverend Devasahayam உனக்கு அதைத் தெளி வாக்கக்கூடும் என்று நம்புகிறேன். அவரிடத்தில் போ' என்றார். நான் இரா நித்திரை தெளிந்தவுடன் உங்கள் வீட்டுக்கு வழிகேட்டுக் கொண்டு வந்தேன். நீங்கள் இந்த விஷயத்தை என் புத்திக்கு பொருந்தச் சொன்னால் நான் இன்றைக்கே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்வேன்.'' என்று தெரிவித்தான். ஒரு மணி நேரத்திற்குள் இந்த ரகசியத்தை அவன் புத்திக்கு பொருந்தும்படி சொன்னேன். கடவுளுடைய தன்மையைக் கொண்டு இந்த விஷயத்தை விளக்கினேன்.

"1 யோவான் 4-8-இலும் தேவன் அன்பாகவே இருக்கிறார் என்று சொல்லியிருக்கிறது. தேவனே அன்பு; அன்பே தேவன் என்பது சத்தியம். ஆளில்லாமல் அன்பு இருக்காது. அன்புத்தன்மையான தேவன் அன்புத்தன்மையான ஆள். அன்புத்தன்மையான ஆள் ஆகிய தேவன் ஒற்றை ஆளாய் இருக்கமுடியாது. ஏனெனில் அன்பு தன்னையும் தனக்கு உள்ளதையும் தானே சாப்பிடாது. அதே சாப்பிட்டால் அது அன்பல்ல. அது தற்சிநேகம் அல்லது அன்பில்லாமை. ஆகவே அன்பாலாகிய தேவன் தன்னையும் தனக்குள்ளதையும் கொடுக்க ஓயாமல் புறப்பட்டுக் கொண்டேயிருக்கவேண்டும். அப்படி புறப்பட்டுக் கொண்டேயிருத்தல் தெய்வ வீச்சுக்குள்ளேயே நடைபெறவேண்டும். ஆகவே தெய்வீகத்திலே அன்புத் தன்மையாகிய நான் என்கிற ஆள் தம்முடைய தெய்வ ஆள் தன்மையோடும் தம்முடைய தெய்வ இலட்சணங்களோடும் ஓயாமல் புறப்பட்டுக் கொண்டே இருக்கவேண்டும். அப்படி புறப்படுகிற தெய்வ ஆள் தேவனில் இருந்து தேவனும் ஜோதியிலிருந்து ஜோதியும் ஆக பிறக்கிற தெய்வீக இரண்டாம் ஆளாகிய தேவகுமாரன். தேவனில் இருந்து புறப்படுகிற இந்த தேவகுமாரன் மடங்கி தம்முடைய தெய்வ ஆள்த் தன்மையோடும் இலட்சணங்களோடும் பிதா

லூத்தரன் மிசியோனரிமார்களும் இந்திய குருக்களும். நாற்காலியில் வீற்றிருக்கும் இரண்டு ஐரோப்பிய குருக்களின் நடுவில், தேவசகாயம் ஐயர் வீற்றிருக்கிறார்கள்.



வண்டைக்குத் திரும்புகிறார். இவரே தெய்வீகத்தின் மூன்றும் ஆள். இப்படி அன்பாகிய தெய்வீகத்திற்குள்ளே ஓயாத புறப்படுதல் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. திரித்துவ இரகசியம் இதுதான்."

இதை அறிந்துகொண்டு, அவன் ஆனந்த நிர்த்தனம் பண்ணி "இனி ஞானஸ்நானம் பெற்றுக்கொள்வேன்" என்றான். ஆகிலும் வேத உபதேசங்களை என் வாயாலேயே முழுதும் கற்றுக்கொண்டு ஞானஸ்நானம் பெறத் தீர்மானித்தான். ஒரு மாதம் வரையில் ஓயாத ஜெபத்துடனும் அடங்காத ஊக்கத்துடனும் இரட்சிப்பின் உபதேசங்களையெல்லாம் கற்றுக்கொண்டு, ஒரு ஞாயிறு சாயந்தர ஆராதனையில் ஒரு மணி நேரமாக தன்னுடைய கிறிஸ்தவ விசுவாசத்தை விளக்கி பிறகு என்னால் ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டான். கோவிலில் ஞானஸ்நானம் எனக்கு நீங்கள் கொடுத்தால் என் உடம்பும் வஸ்திரமும் நனையும்படியாக ஏராளமாய்த் தண்ணீர் விடவேண்டுமென்றான். அப்படியே ஞானஸ்நானம் பெற்று Burmaவுக்கு கப்பல் ஏறினான்.

•

அவன் கிறிஸ்துவைக் கண்டடைந்த விதம் விசேஷமானது. அவனுடைய தகப்பன் வைராக்கியமுள்ள மகம்மதியர். அவருக்கு Colombo-வில் ஒரு ஷாப்பு இருந்தது. அதில் இந்த மகன் அலுவலாயிருந்தான். இவன் அக்காலத்தில் F. A. பரீட்சைக்கு போய் தேறாமல் போனான். English-லும் European Philosophy-லும் நல்ல அறிவு உடையவன். ஒரு நாள் சரக்கு மடிக்க முதலில் சில ஏடுகளில்லாத ஒரு பெரிய புஸ்தகத்தின் ஏட்டைக் கிழித்தான். அது இச்சிக்கத்தக்க நல்ல அச்சாயிருந்ததினால், அதில் சரக்கு மடிக்க இஷ்டமில்லாமல் வேறு காகிதத்தில் மடித்துவிட்டு அந்த ஏட்டில் என்ன இருக்கிறதென்று படித்தான். அது மத்தேயு சுவிசேஷத்

தின் ஐந்தாம் அதிகாரம். அதைப் படிக்கப்படிக்க அவன் மனசுக்கு பிரியமாயிருந்ததினால் கிழிக்கப்பட்ட அந்த புஸ்தகத்தின் மீதி ஏடுகளையெல்லாம் படிக்கிறதென்று தீர்மானித்து, தினம் தவறாமல் படித்து வந்தான். வாசிக்க வாசிக்க அந்தத் திருவசனம் அவனுடைய இருதயத்தில் வேலை செய்தது. அது கிறிஸ்தவ வேத புஸ்தகம் என்று அவனுக்கு தெரியாது. தெரிந்திருந்தால் படித்திருக்கமாட்டான். அந்த புஸ்தகத்தின் மீதி பாகத்தையும் சம்பாதித்து படிக்க ஆசை மூண்டது. அதினால் ஷாப்புக்கு வந்த இங்கிலீஷ்காரரிடத்தில் கிழிக்கப்பட்ட புஸ்தகத்தைக் காட்டி "இது என்ன புஸ்தகம்?" என்று கேட்டான். அவர்கள் "இதுதான் கிறிஸ்தவர்களின் வேதமான Bible" என்றார்கள். எங்கே அகப்படும் என்று விசாரித்தபோது Colombo-வில் Bible Depot-ல் அகப்படுமென்றார்களாம். அவன் அன்றைக்கே போய் ஒரு Bible வாங்கினான். அதுமுதல் அவன் கிறிஸ்துமேல் பற்றுவைத்து, மகம்மதிய ஆராதனையைத் தள்ளிவிட்டான். அதினால் அவன் தகப்பன் கோபங்கொண்டு அவனை தூத்துக்குடியிலிருந்த தன் வீட்டுக்குக் கொண்டுபோய் கடினமான சிறையில் வைத்து உபத்திரவம் செய்தான். அவன் கிறிஸ்துவை விடாப்பிடியாய்ப் பிடித்திருந்ததைக் கண்டு அவன் தகப்பன் உறவின்முறையார் சம்மதியுடன் அவனை ரகசியமாய் கொன்றுவிட சதியாலோசனை பண்ணிக்கொண்டிருந்தான். அது அவனுக்குத் தெரியவந்தபோது, ஒரு நாள் தனக்கு சாப்பாடு கொண்டுவந்த பெண்சாதி காலில் விழுந்து, "எப்படியாவது என் பிராணனைக் காப்பாற்று" என்று கெஞ்சினான். அவள் தன் கைக்கு அகப்பட்ட காசை அவனுக்குக் கொடுத்து கட்டியிருந்த வஸ்திரத்தோடே ஓடிப்போகச் சொன்னாள். அப்படியே அவன் சென்னைமட்டும் ஓடிவந்தான். அவன் Burma-வில் சிலகாலம் மறைந்திருந்து, பிறகு வெளிப்பட்டு, சுவிசேஷத்தை பிரசங்கிக்க எண்ணங்கொண்டான். ஆகையினால் Burma-வுக்குப்

போன பிறகு தான் இருக்குமிடத்தை அவன் எனக்குத் தெரிவிக்கவில்லை.

இங்கு ஒரு விசேஷம் சொல்லவேண்டும். நான் சில காலமாய் கஷ்டப்பட்டு ரூபாய் 13 சேர்த்து ஒரு "Young's Analytical Bible Concordance" வாங்கவேண்டுமென்று வைத்திருந்தேன். அதற்கு இன்னம் இரண்டு ரூபாய் குறைவாயிருந்தது. ரூ. 15 முன்னமேயிருந்தால் வாங்கியிருப்பேன். கையிலிருந்த ரூ. 13-ஐயும் வந்த மகம்மதியனுக்காக சாப்பாடு முதலியவைகளுக்கு செலவழித்தேன். அவன் ஞானஸ்நானம் பெற்று போனபின், நான் ஆண்டவரிடத்தில் போய் எப்படியாகிலும் அந்த Concordance எனக்கு சீக்கிரம் வாங்கித் தரவேண்டுமென்று கேட்டேன். கேட்ட மறுநாளே Schoenfeld என்ற ஓர் ஜெர்மன் துரை என் வீட்டிற்கு வந்தார். அவர் லக்ஷப்பிரபு. என்னோடு சிலநேரம் பேசினபின் "மறுநாள் ஞாயிறு காலை ஆராதனைக்கு கோவிலுக்கு வருவேன்" என்று சொல்லிப்போனார். அப்படியே வந்தார். ஆராதனை முடிந்தபின் என் சபை ஏழைகளில் முப்பதுபேரை வரச் சொன்னார். ஆளுக்கு ரூ. 1 கொடுத்தார். என் கையைத் திறக்கச் சொல்லி, ஒரு சவரன் கொடுத்தார். "என் ஞாபகத்துக்காக ஒரு புஸ்தகம் வாங்கிக்கொள்" என்று பட்சமாக சொன்னார். நான் ஆண்டவருக்கு ஸ்தோத்திரம் செலுத்தி மறுநாளே வாங்கினேன்.

---

## அத்தியாயம் 16.

---

### அவர்கள் செய்த பல வேலைகள்.

### இராயபுரச் சபையை ஏற்றுக்கொண்டது.

1896-ம் வருஷமுதல் சென்னை Christian Literature Society சம்பந்தமாய் சில வேலைகள் செய்ய நேர்ந்தது. அச்சுக்

குத் தயாராகவேண்டிய கையெழுத்துப் பிரதிகளை திருத்துவதும் பழைய அச்சுப் புஸ்தகங்களை பாஷையும் நினைவும் திருத்திக் கொடுப்பதும் நான் செய்த வேலையாம்.

**தமிழில் திருப்பின நூல்கள் :**

(1) "Abide in Christ" by Andrew Murray
(2) "Christ in the School of Prayer" by Andrew Murray
(3) "Livingstone, the Pathfinder" by Basil Matthews
(4) "Litany of Love" by Miss Lousie Marston
(5) "The King's Call" ,, ,, ,,
(6) "Rainpaf Sing's Surender" ,, ,, and
(7) "Victory (or) Defeat" ,, ,,

1903-ம் ஹூ முதல் 1910-ம் ஹூ வரையில், நான் வருஷத்திற்கு ஒரு மாசம் லீவு வாங்கி திண்டுக்கல், மதுரை, திருப்பத்தூர் முதலிய இடங்களில் இந்துக்களுக்கு சுவிசேஷ வேலை செய்தேன். மதுரையிலும் திண்டுக்கல்லிலும் அறிவாளிகளான இந்துக்களுக்கு இங்கிலீஷிலும் உபந்நியாசம் செய்தேன். அப்போது நான் கண்ட அனுபோகம் என்னவென்றால், 'கிறிஸ்து மார்க்கம் பண்டிதருக்கும் பாமரர்க்கும் இருதயத்திற்கு இதமான மார்க்கமே' என்பது. ஒரு விசை "Atonement" என்ற விஷயத்தின்மேல் இங்கிலீஷில் உபந்நியாசித்தபின் வெகுபேர் சந்தோஷப்பட்டு, 'கிறிஸ்து மார்க்கம் எப்பேர்ப்பட்டது என்று இப்போதுதான் எங்களுக்குத் தெரிந்தது' என்றார்கள். தமிழ் வித்தையில் அடைந்திருந்த அறிவால் கிறிஸ்து மார்க்கத்தை இந்துக்களுடைய பாஷை நடையிலேயே சொல்லக்கூடியவனானேன். அதினால் தமிழ் மாத்திரம் அறிந்த இந்துக்களுக்கும் கிறிஸ்து மார்க்கத்தின்

மேல் பிரியமுண்டாயிற்று. பற்பல இடையூரான கேள்வி களைக் கேட்டார்கள். அவைகளுக்கெல்லாம் சில நேரங்களில் உடனேயும், சில சமயங்களில் பிரசங்கத்திற்கு பிந்தியும் உத்தரவு சொல்லக்கூடியதாயிற்று. என் ஆயுசின் அந்திய காலத்தை செய்யுள் நடையில் இந்துக்களுக்கு பிரசங்கிப்பதில் பின்னிட விருப்பமாயிருக்கிறேன்.

1910-ம் ௵ ஜூலை மாதம் 3-ந் தேதி நான் ஆண்டவரிடத்தில் கேட்ட 15 வருஷங்களின் கடைசி நாளாகையால் நான் என் சிநேகிதர் பலர் இடத்தில் பரலோக பிரயாணத்திற்கு விடைபெற்றுக் கொண்டு வந்தேன். ஆயினும் இந்நாள் (8th June 1913) வரையும் ஆண்டவர் தவணைக்குமேல் தவணை எனக்கு கட்டளையிட்டிருக்கிறார். 1907-ம் ௵ முதல் சென்னை இராயபுரம் விடிவெள்ளிச்சபை தன் குருவாகிய சங். ஈசாக் ஐயரோடும் வட்ட Senior ஆகிய சங். Bower சாஸ்திரியாரோடும் கடினமான ஒவ்வாமை அடைந்து சபைக்கட்டணங்களைத் தனியே வசூல் செய்து பிரிந்து வேறு சபைக்குப் போக எண்ணமாயிருந்தார்கள். அவர்களுடைய முகாமைச் சங்கத்தார் நால்வரில் மூவர் உத்தியோகத்தினின்று தள்ளப்பட்டிருந்தார்கள். சபையின் நிலைமை பரிதாபமாய் போன பொழுது 1909-ல் என்னை வட்ட Senior ஆகவும், கனம் முத்துசாமி பிரசங்கியாரை குருவாகவும் ஆலோசனைச் சங்கத்தார் நியமித்தார்கள். அதற்கு பிறகு சபையின் ஒவ்வாமை முழுவதும் நீங்கி சமாதானம் ஏற்பட்டது. அவர்கள் தனியே சேர்த்து வைத்திருந்த ரூ. 300-ஐயும் மேற்படி சபை பொக்கிஷத்திற்கு ஒப்புக்கொடுத்தார்கள்.

1910-ம் ௵ கனம் முத்துசாமி பிரசங்கியார் குரு அபிஷேகம் பெற்று வேறு இடத்திற்கு 1911-ம் ௵ பெப்ருவரி மாதம் மாற்றப்பட்டார். ஆகவே அந்த வருஷம் மார்ச்சு மாதம்

முதல் விடிவெள்ளிச் சபையின் முழுப் பொறுப்பையும் ஒப்புக் கொண்டு இந்நாள் (28 th June 1918) வரையும் அதை நிர்வாகித்து வருகிறேன். இதற்கெல்லாம் வேண்டிய பெலமும் சுகமும் அருளிவருகிற கர்த்தராகிய ஆண்டவருக்கு ஸ்தோத்திரம்.

---

## அத்தியாயம் 17.

---

### முடிவுரை.

மூந்தின அத்தியாயத்துடன் எனக்கு மிகவும் அருமையான ஐயரவர்களின் சுயசரித்திர வரலாறு முடிந்தது. எனக்குத் தெரிந்த சில காரியங்களைச் சொல்லி முடிக்க விரும்புகிறேன்.

ஞாயிற்றுக்கிழமைதோறும் செய்யவேண்டிய பிரசங்கங்களை சனிக்கிழமைகளில் அவர்கள் தயார் செய்கிற வழக்கமே கிடையாது. இந்த நாளுக்கு முன்னமே தியானித்து ஆயத்தப்படுத்திக்கொண்டு, சனிக்கிழமைகளில் மற்ற ஜோலியாய்ப் போவார்கள். ஓர் சனிக்கிழமையில், ஒரு ஆங்கிலேய பாதிரியாரைப் பார்த்து சில விஷயங்களைப்பற்றிப் பேசப்போனார்களாம். அதற்கு, "இன்று சனிக்கிழமை அல்லவா? ஐயர்மார் பிரசங்கம் தயார் செய்யும் நாளாச்சுதே! நீங்கள் எப்படி மற்ற அலுவல்களில் செலவிடுகிறீர்கள்!" என்று கடிந்துகொண்டாராம். அதற்கு தகுந்த விடை பகர்ந்தார்கள். ஒரு உயர்ந்த மேஜையண்டை நின்றுகொண்டு தான் பிரசங்கத்தின் குறிப்புகளை எழுதுவது வழக்கம்.

வீட்டிலே சாய்மான நாற்காலி (easy chair) உபயோகித்ததே கிடையாது. ஜேபிலே போடும் கடிகாரமும் அவர்களுக்கு இஷ்டம் இருந்ததில்லை. உட்காரும் அறையில் ஒரு பெரிய கடிகாரம் (clock) தான் இருக்கும். எனக்கு சிநேக

மான காலத்தில், அவர்கள் வெளியே புறப்படும் சமயத்தில் ஜேபில் ஒரு துண்டு கடுதாசியில் தன்னுடைய பெயரையும் மேல் விலாசத்தையும் எழுதிப் போட்டுக்கொள்வதைக் கவனித்திருக்கிறேன். இதன் காரணத்தை எனக்குக் கேட்க கூசின படியால், அவர்களிடம் கேட்கவில்லை. தான் 1895-ம் ௵ இருதய வியாதியினின்று அற்புதமாய் பிழைத்தாலும், இருக்கக்கூடிய இருதய பெலயீனத்தினால் ஒருக்கால் தான் வழியில் போகும் வேளையில் அசுப்பான மரணம் நேரிட்டால், ஜேபில் இருக்கும் மேல் விலாசத்தைக் கொண்டு தான் இன்னார் என்று பிறத்தியார் அறிந்து தகுந்த ஒழுங்கு செய்யக்கூடும் என்ற நோக்கமே அதற்கு காரணம் ஆக யூகித்துக்கொண்டேன். இதினால் விருத்தாப்பிய காலத்தில் அவர்களுக்கு மரணம் எப்பொழுதும் விசேஷித்த விதமாய் முன்னாலேயே இருந்திருக்கிறது என்பது தெரியவருகிறது. பலத்த விசுவாசியானபடியினாலே மரண இருளின் பள்ளத்தாக்கிலே உயிரோடே நடந்தார்கள்.

நான் அறிய அவர்களுக்கு வாயில் ஒரு பல்லும் இருந்ததில்லை. பொய் பற்களும் கட்ட அவர்களுக்கு இஷ்டமில்லை. ஆனாலும் திருத்தமாய் பேசிக்கொண்டுதான் வந்தார்கள்.

Sacred Songs and Solos-இல் சில பாட்டுகளைக் கற்க விரும்பினபடியால் நான் சிலவற்றைக் கற்றுக் கொடுத்தேன். 'Sweet Hour of Prayer' என்று துவக்கும் பாட்டு அதிகப் பிரியமாயிருந்தது.

> "This robe of flesh I'll drop and rise
> To seize the everlasting prize."

என்ற அடிகளை அதிக ஊக்கமாய்ப் பாடுவார்கள்.

உபவாசித்து ஜெபிப்பதில் அவர்களுக்கு விசுவாசம் இருந்ததாகத் தெரிகிறது. அவர்கள் குமாரர் தாவீது B. A.

1914-ம் வருஷம் வியாதியாயிருந்தபோது, அவருக்காக ஆறு நாள் அன்னந் தண்ணீரில்லாமல் ஜெபத்திலேயே தரித்திருந்தார்கள்.

இந்த சுயசரித்திரத்தை முற்றும் தன் ஞாபகத்தைக் கொண்டே சொன்னார்கள். வருஷங்களும் தேதிகளும் ஒரு கஷ்டமும் இல்லாமல் அவர்கள் ஞாபகத்திற்கு வந்தது. ஒரு சிறு Diary-இல்கூட அவர்கள் தன் ஜீவியத்தில் நடந்த சம்பவங்களை தேதியுடன் குறித்து வைத்திருந்ததில்லை.

மரிப்பதற்கு சற்றேறக்குறைய இரண்டு வருஷங்களுக்கு முன் அவர்கள் எனக்கு செய்யுள் நடையில் மாற்றி அனுப்பின இரண்டு சங்கீதங்களை இங்கே பதித்து முடிக்கிறேன்.

---

## 23-ம் சங்கீதம்.

### The Joy of the Redeemed.

### இரட்சிக்கப்பட்டவனின் ஆனந்தக் களிப்பு.

**தேவாரம்: பண், கந்தாரம்.**

வல்லபர னேயெனக்கு வாய்த்ததிருக் [1]கோனதினால்
[2]அல்லு [3]விழைப் பாரகில வுலகமிசை அரிதாவார்
பல்லகுறை யானவையும் [4]படர்களும்போம் எனைப்போல்
நல்லவரம் பெற்றவரிந் நானிலத்தில் எவருளரே.

[1] அரசன்; [2] துன்பம்; [3] செய்வோர்; [4] துன்பம்.

புல்லடர்ந்த [1]புனங்களிலே பசியாற எனைமேய்த்துக்
கொல்லுசின விலங்கினஞ்செய் கொடுமைகளுக் கெனைக்காத்துக்
கல்லதனைக் கீறிவரு கடுவேகம் [2]புனலொதுக்கி
நல்லசுனை நீரதனை [3]நானருந்தச் செய்கின்றார்.

[1] வயல்; [2] தண்ணீர்; [3] சாப்பிட.

என்னுளத்தில் ஓயாமல் எழுந்திடுதீ யானதெனை
[1]வின்னமுற வருதீதாமல் [2]வாட்டித்தம் திருநாமப்
பொன்னரணை அடைந்தேனை நீதிசெலும் பாதைகளில்
[3]மன்னிடுகென் றெந்நாளும் மழையருளைச் சொரிகின்றார்.

[1] சேதம் உண்டாக; [2] அடங்கப்பண்ணி; [3] நிலைத்திரு என்று.

இனியொரு நாள் இவ்வுலகை [1]இகந்துமரணப் [2]படுகர்
தனிவழி நான் போகையிலே சாவினிழல் தனைக்கண்டு
[3]தனியடையேன் இது [4]சரதம் துணைக்குமது தனிக்கோலும்
[5]பனித்தண்டும் வருமதனால் பொல்லாங்கு [6]பரிந்திடுமே.

[1]விட்டு; [2]பள்ளத்தாக்கு; [3]துன்பம்; [4]உண்மை; [5]குளிர்ந்த கோல்; [6]விலகிவிடும்.

[1]அம்மையுல கத்துமெனை ஆதரித்தங் கொருவிருந்து
[2]வெம்மையுளார்க் கெதிரேவைத் தென்சிரசை [3]வேரிகமழ்
செம்மையுறு நறுந்தயிலம் சேர்த்திடுகின் றீர்நாளும்
விம்மிதமாய் நிறைகின்ற தியான் [4]பருகும் [5]வியன்கலமே.

[1]மறுமை; [2]பகைவர்; [3]வாசனை வீசம்; [4]குடிக்கும்; [5]மேலான பாத்திரம்.

வானகரத் தனிவீட்டு வாழ்வினிறுன் வருமளவும்
ஆனபல நன்மைகளும் அருள்மழையும் எனைத்தொடரும்
[1]மானபரன் மாமனையின் மகிழ்பெறுநாள் [2]மருவிடுமேல்
நானகலேன் ஒருநாளும் நகரினிலே நிலைத்திருப்பேன்.

[1]வல்லபமுள்ள; [2]கிட்டும் அதன்பிறகு.

---

## The Lament of the Lonely Soul.

## தனிமை தாங்காத ஆத்துமத்துயர்.

### சங்கீதம் 88.

தேவாரம்: பண், முகாரி.

கீர்த்தனைச் சந்தம்: ஆருந்துணையில்லையே.

என்னை ஆளுடை இறைவனே என்னை எங்கும் சூழ்ந்தொரு
[வெள்ளமாய்
இன்னல்வந்தலை மோதுவேளையில் இங்ஙனுறெனைத் தாங்குவோர்
என்ன செய்குவர் ஏழைமானிடர் என்றுயர்க் கிணை யாவாரோ
தன்ன மானது தாயின் வேறொரு தஞ்சங்காணத் தருவதோ.

இரவுங் கூவினேன் பகலுங்கூவினேன் ஏங்கியென்மனம் வாடி
கரவுசெய்து நீபோயொளிந்தது காணவல்லனோ கன்மியேன்[னேன்
பரவுதூதர்கள் போற்றிப் பேரிசை பாவியேன வலக்குரல்
வரவுகொன்றதோ வள்ளலே திருச்செவியுளே தென்றறிகிலேன்.

---

இன்னல் = துன்பம்; இங்ஙன் = இப்புவி; இணை = சகாயம்; தன்னம் = பசுக்கன்று.

ஆவிசோருதே அங்கமும் நிலைகுலையுதே அழல்மூழ்கின
தாவில்லாதவோர் கீடமாயினேன் தஞ்சமுன் திருத்தாள்மலர்
ஏவிலக்குவல் வாஎனத்துயர் ஏழையேற்குரை சாற்றுவாய்
பாவீசைத்துயர் தூதரானவர் பாடுபங்கயப் பாதனே.

மரணவாயிலை யணுகலாயினேன் மாண்டமாந்தர் கிடக்கிற
தரணிகாணியாக் கடுகுபேதையேன் தனிமைதாங்கிடத் தாள்வனோ
அரணமென்றுனின் தாழ்மலர்த்துணை அண்டினேனைவந்
சரணமாக வந்தகிலலோகமும் சாருசற்பிர சாதனே. [தாளுவாய்

ஆழ்ந்தபாதலப் படுகுழிக்குளே அள்ளிருள் விலந்தன்னிலே
வீழ்ந்து வீயெனத் தள்ளியாங்கதன் வியன்கதவம டைத்தனை
சூழ்ந்த வெம்பெரும் பாவத்தால் விளை சூரிங்குற்றதென்
[றஞ்சினேன்
பாழ்ந்துயர்க்கத வந்திறந்திடப் பரமனேமன துருகுவாய்.

மண்ணுளே மறைந்தொழிந்த மானிடர் வழங்குவார்களோ
[உன்னிசை
எண்ணியுன் திருச் செயல்களைச் சொல என்ன வல்லர்மாண்
[டோய்ந்தவர்
கண்புதைந்து படுத்தவர்குழி காட்டுமோ வுன்க ருணையை
கண்ணவந்தெனைக் காத்தல் செய்குவாய் கருணைபூத்த
[செங்கையனே.

இளமை தொட்டெனைப் படர்கள் சூழ்ந்தன இனியவர்
[பகையாயினார்
கிளம்பியுன் திரு முன்வந்தென் மனு கிட்டுங்காலையு தறிடா
துளமலர்ந்தடம் சினந்தணிந்தெனை உவந்து பார்கட்க டையினால்
தளங்கொள் காரிருள் தழுவினேற்கருள் தருதற்கீது தருணமே.

---

கீடம் = புழு ; பங்கயம் = தாமரை ; தரணி = இடம் ; கடுகுதர் = விரைதல் ; அரணம் = பத்திரத்தானம் ; சற்பிரசாதம் = அனுக்கிரகம் ; வீ = சா ; சூர் = தீமை ; கண்ண = சுறுக்காய் ; படர் = துன்பம் ; கட்கடை = கடைக்கண் ; தளம் = தடிப்பு ; அவலிக்குரல் = அழுகுரல்.

முற்றிற்று.

The Lawley Electric Printing Press, K. M. Hall, Tanjore.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | | |
|---|---|---|---|
| 25 | 15 | ‘பிச்சைக்காரனுக்கு’ | என்று வாசிக்க. |
| 32 | 2 | ‘ஆசீர்வாதம்’ | ,, |
| 36 | 23 | ‘அம்மன்பேட்டையிலிருந்து’ | ,, |
| 39 | 20 | ‘பாதிரியார்’ | ,, |
| 45 | 14 | ‘பயங்கரமாயிருந்தது’ | ,, |
| 47 | 21 | ‘ஆதிதிராவிடரை’ | ,, |
| 54 | 1 | ‘கோபமுண்டாயிருந்தது’ | ,, |
| 59 | 26 | ‘கண்டவர்களே’ | ,, |
| 61 | 11 | ‘திராணியில்லை’ | ,, |
| 71 | 1 | ‘உன் தேவனாகிய நானே’ | ,, |
| 73 | 17 | ‘செய்தார். இன்று’ | ,, |
| 81 | 18 | ‘ஒப்புவிக்கப்படும்’ | ,, |
| 95 | 18 | ‘விசேஷமானது’ | ,, |



